கழக வெளியீடு — சகஉ

Sanka Kala Vellel Kal

# சங்க கால வள்ளல்கள்

## இரண்டாம் புத்தகம்

## ஆய் — அண்டிரன்

## மலையமான் - திருமுடிக்காரி

திருவாளர் சிவ. குப்புசாமிப் பிள்ளை அவர்கள்

எழுதியது.

திருநெல்வேலி, தென்னிந்திய

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்

திருநெல்வேலி :: சென்னை.

# பதிப்புரை

ஆலமர்வோற் காடைதந்த ஆய்வேள்மூ வேந்தர்துணை
ஏழுமுடிக் காரி இவர்.

சங்ககால வள்ளல்கள் என்னும் இவ்விரண்டாம் புத்தகம் கடை எழு வள்ளல்களுள் "பொதியின்மலை வள்ளல் ஆய் அண்டிரனையும், மலையமா நாட்டு வள்ளல் மலையமான் திருமுடிக்காரியையும்" தன் அகத்துக்கொண்டு ஆசிரியர் திரு. சிவ. குப்புசாமிப்பிள்ளை அவர்களால் நாடகமாக எழுதப்பட்டு விளங்குவது.

புலவர், மன்னர், வள்ளல் முதலியோர் தன்மையும் அதனால் நாட்டுக்கு ஏற்படும் நன்மையும் நாடு வளமுற்று வாழ்தலும் முதற் புத்தகப் பதிப்புரையில் காட்டியிருக்கின்றோம்.

வரலாறுகளை நாடகவடிவில் உணர்வோர்க்குத் தாமும் அவ்வாறு நடக்கவேண்டும் என்னும் ஊக்கமும் உரனும் இயல்பாகவே உண்டாகும்; அதனால் அவரும் நாடும் நலன் எய்துவர்.

முன் போலவே இந் நாடகங்களும் முறையே 20-10-1935-ல் தஞ்சை, கரந்தைத் தமிழ்ச் சங்கக் கல்லூரியின் பத்தொன்பதாவது ஆண்டுவிழாவின் போதும், 12-4-1937-ல் திரு. S இராமலிங்கசாமி நாட்டாரவர்கள் (B.A.B L. தஞ்சை) தலைமையில் நடந்த இருபதாம் ஆண்டுவிழாவின்

போதும், தமிழ்ச்சங்க மாணவர்களால் திறம்பெற நடிக்கப்பெற்று எல்லாராலும் பாராட்டப்பட்டுள்ளவை,

இதனையும் முதற்புத்தகம் போலவே மாணுக்கர் ஆசிரியர், பெருமக்கள் எல்லாரும் வாங்கிக் கற்றுப் பயனெய்து மாறும்; அம்முறையில் எங்களை ஊக்கு மாறும் வேண்டுகின்ருேம்.

மார்ச்சு 1947
சென்னை.

தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# சங்ககால வள்ளல்கள்

## (இரண்டாம் புத்தகம்)

---

## வள்ளல் - ஆய் - அண்டிரன்

**வரலாறு :**—நிலமகட்கு அணிமுகமாகும் நம் தமிழகம், பண்டு முடியுடை மூவேந்தர்களாலும் பல குறுநில மன்னர்களாலும் ஆளப்பட்டு வந்தது. குறுநில மன்னர்களுள் ஒரு சிலர், உலகமே வரினும் கொடுப்பதிற் பின்வாங்காத கொடைத்திறனும், எத்திறத்தவர் எதிர்ப்பினும் அஞ்சாது போர்புரியும் தோள் வன்மையும் வாய்க்கப்பெற்று, எவரும் புகழ ஆண்டுவந்தனர். அத்தகையவருள் வள்ளல் ஆய அண்டிரனும் ஒருவனாவான்.

இவன் கடையெழு வள்ளல்களுள் ஒருவன்; பொதிய மலையைச் சார்ந்த 'ஆய் குடி' என்ற செழிப்பு மிக்க நகரத்தைப் பெற்றவன்; 'கவிர' மலைக்குக் காவலன்; வேளிர் குடிக்குத் தலைவன்; இன்னும் முடியுடை வேந்தர்க்குப் பெண் கொடுத்தற்குரிய உழுவித்துண்ணும் வேளாளர் மரபில் தோன்றியவனுமாவான். இவன் இளமைதொட்டு, கல்வி கேள்விகளிற் சிறந்தவனாய், வில் வாள் பயிற்சிகள் மிகுதியும் பெற்றுப் பெரியோர்களைப் பணிந்து, எளியவர்களைப் பேணி, எவரும் போற்ற இனிது வாழ்ந்துவந்தான்.

இஃதறிந்த கொங்குமன்னன், இவன்பால் அழுக்காறுற்றான். தன் நாற் படைகளையுந் திரட்டினான்.

ஆய்வேள்மீது கொடுஞ்சமர் செய்யக் கருதினன். ஒரு நாள் திடீரென ஆய் நாட்டை முற்றுகையிட்டுப் போர்ப்பறை எழுப்பினன். போர்ப்பறை கேட்டதும் ஆய்மன்னன் நாட்டஞ் சிவந்தனன். ஒல்லையில் தன் எல்லையில் நாற்படைகளையுங் கூட்டினன். இருவர்க்கும் ஒரு போர் நிகழ்ந்தது. கொங்கரது படை ஆய் நாட்டுப் படையுடன் நிற்க வாற்றாது புறமுதுகிட்டுப் போயிற்று. கொங்கன் தோற்று ஓடவே, ஆய்வேள் வெற்றி வாகை சூடினன்.

சின்னாள் சென்றதும், ஆய்வேள் பொதிகை நாட்டுத் தலைவன் மகள் பொற்பூங்கோதை யென்னும் உருவினும், திருவினும் மிக்காளை ஓர்ந்து மணங்கொண்டான். அவன் பூங்கோதையுடன் இல்லறமாகிய நல்லறத்தைச் சிறிதும் வழுவாது புரிந்து, அறவோர்க்களித்தல், அந்தணர் ஓம்பல், துறவோர்க்கெதிர்தல், விருந்தெதிர்கோடல் ஆகிய சிறப்புகளைச் செய்து, நாளும் தன்னை நாடி வரும் புலவர், இரவலர், பாணர், கூத்தர் முதலியவர்கட்கு என்றும் அடையாத வாயிலுடையோனாய் வாழ்ந்துவந்தான்.

இரப்பவர் இன்முகம் காணுமளவும் ஈயும் தன்மையனாதலால், இவனது குன்றத்தனைய செல்வம் யாவும் வரவரக்குறைய, அவனது வாழ்க்கைக்குரிய நலத்திற்கும் ஏதம் வருமாறு வறுமை நோய் வாட்டியது. வறுமையின் கொடுமையால் வள்ளல் ஆய்வேள், நாகமன்னன் விருப்பிற்கிணங்கி அவன் நாடு சென்று ஆண்டுப் பலநாள் வதிந்தனன். பிறகு அவனால் தரப்பெற்ற உயர்ந்த பரிசுகளுடன், தன்னாடு நோக்கி வரும்போது வழியில் ஓராலமர நீழலின்கண் சிவபெருமானின் அருவுருவத் திருமேனி ஒன்று, புறக்

கணிக்கப் பெற்றிருப்பதைக் கண்டான்: உடனே அதனிடத்துப் பேரன்பு கொண்டான். தான் அரிதிற் பெற்ற, நாகநாட்டு மன்னன் அளித்த நீல நிறமுள்ள உயரிய உடையை அவ்விறைவனுக்கு மகிழ்ச்சியுடன் உடுத்தி, அகங்குளிரப் பாடிப்போற்றித் தன் நாடு திரும்பினான்.

பின்னர், தன் நாட்டின் அரசுரிமையை யேற்று இந்திரனும வானவூர்தியுடன் தன்னையும் தன் உடன் போந்த துணைவியரையும் எதிர்கொண்டு வணங்கி ஏற்றருளுமாறு பன்னாள் ஆண்டுப், பின் விண்ணொடு சென்றான்.

---

## இயல் க. காட்சி க.

**இடம்:**—ஆய்குடி முருகன் கோயிலின் திருமுன்.

**காலம்;**—வைகறைப்பொழுது.

**உறுப்பினர்:**—முதுமொழிக்கூத்தன், முடிநாகன், பூங்குன்றன், நெடுங்குன்றன், இளந்திரையன், பணியாளர்.

[ஆய்குடி மக்கள் கொங்கர் படையெடுப்பில்
வெற்றி குறித்து முருகவேளை வழிபடுதல்.]

(கூத்தனுருடன் பூங்குன்றனும் நெடுங்குன்றனும்
கூடிப் பராவுதல்.)

### பாட்டு

*மாமயில் மீது லாவும் சேயடி நாளுஞ் சூடி*
*ஊழ்வலி யாவும் நீக்கி மேனிலை எய்த லாமே*
*நீஎன்நன் நெஞ்சே நினைவாய் நேர்நெறி ஈது காணாய்*
*கூர்வடி வேல னாருள் கூடிட மேவு நலனே.*

**முதுமொழிக்கூத்தன்:**—(முருகனை வணங்கி, குடங்கைதம் பட்டு, குறையிரத்தல்) அன்பெனும் பிடியுள்

அகப்படுங்கனியே! உலகின் தலைவ! எங்களது நாடு என்றும் நின்காவலைப் பெறுக! நின் அருட்டிருக்கண் நோக்கன்றோ இவ் வாய்குடியும் கல்லெனக் கலித்து இழியும் அருவி நிறைந்த அக்கவிரமலையும், அழகு நலம் பெற்ற இந்நிலமா மடந்தையின் இருகண்களெனக் கூறுமாறு ஆக்கியுளது. எங்கள் தலைவன் ஆய்வள்ளல் நின் உண்மைத் தொண்டன் அல்லனோ! அவன் இந் நாட்டின் மக்கள் 'ஆன் இனம்' என்றபோது 'ஆ' என்பதன்றி வேறு வகையில் 'ஆ' வென அலறியதைக் கேட்டறியானே. பெரும! இதுபோது ஏதோ போருற்றதென்கின்றனர்; அஃது உண்மையேல் அவற்கு வரும் இடுக்கண் யாவும் ஞாயிற்றின்முன் வீழும் பனித்துளிபோல மாய அருள்புரிவாய்.

**முடிநாகன்** :—(விரைந்து வந்து கூத்தன் முன் நின்று வணங்கி) எங்கள் பெரும! வணக்கம்.

**முதுமொழிக்கூத்தன்** :—முடிநாக! வருக! என் செய்திகொண்டு வந்தாய்?

**முடிநாகன்** :—தலைவ! நம் நாட்டுப் படைத்தலைவர் இளந்திரையர், நமக்குப் பகையாய கொங்குநாட்டு மன்னன் இனி வரப்போகும் போரில் துன்புற்றுப் புறங் காட்டி ஓடவும், நம் நாட்டுத் தலைவன் ஆய் என்றும் வெற்றியுடன் வாடாவாகை சூடி மகிழவும், நம் குலக் கடவுள் முருகவேளுக்குப் பூசனை புரிய இன்று இவண் வருகின்றார். என்னைத் தங்களிடம் முன்னதாக அனுப்பி வேண்டுவன புரிய ஏவினார்.

**முதுமொழிக்கூத்தன்** :—அப்படியா, ஈதோ யாவும் திட்டமாயின. (அருகில் குற்றேவல் புரிந்து நின்றவனை நோக்கி) அடே, பூங்குன்றா! நீ சென்று நமது இறைவனின் இலவந்திகைச் சூழலிலிருந்து, இன்று

மலர்ந்த நறுமண மலர்களை விரைவினிற் கொய்து மாலையாகத் தொடுத்துக் கொணருவாய்.

**பூங்குன்றன்** :—(வணங்கி நின்று) பெரும! தங்கள் உளப்படியே. (ஓடுகின்றான்.)

**முதுமொழிக்கூத்தன்** :-(மற்றவனை நோக்கி) நெடுங் குன்ற! நீ நம் படைத்தலைவர் இளந்திரையனார் மனங் களிக்குமாறு எத்தகைய குறைபாடுமின்றி, வேண்டிய அளவு பூசனைப் பொருள்கள் யாவும், கடிதில் திட்டம் செய்க. பொழுது விரைவிற் கழிந்து போகும்.

**நெடுங்குன்றன்** :—தலைவ! அப்படியே யாவும் ஒரு கணப்பொழுதில் திட்டஞ் செய்வேன். (பரபரப்புடன் பணியாற்றுதல்.)

**முதுமொழிக்கூத்தன்** :—முடிநாக! கொங்கரது போர்ச்செயல் முற்றுங் கொடிது; அவர்கள் நம்மிறை வனை நன்கறியார்; நம் வள்ளல் ஆய் மன்னர் இக் கொங்கரது இழி செயலுக்கா அஞ்சுவர்? எண்ணில் கோடி எலிகள்கூடி ஒலிப்பினும் ஒரு நாகமுயிர்ப்பின் என்னவாகும்? அழிகின்ற நாள் அவர்கட்கு அண் மைத்தாயது போலும்.

**முடிநாகன்** :—பெரும! அவர்கள் போர்க்கெழு வதற்கு ஆயத்தமாவதை, முன்னரே நம்மன்னர் பெரு மான் அறிந்தார். உடனே அந்நாட்டிற்கு ஆட்கள் போக்கி, அவர்கள் வழியே போரினால் பெருட்செலவு ஏற்படும்; முயற்சியும் அழியும்; மக்கள் பலரும் மாண் டொழிவர்; நாட்டிற்கு நலக்கேடு மிகும்; புறமுது கிட்டுத் தோற்றவர்க்கு என்றும் சிறப்பின்மை ஏற் படும்—என்பன போன்றவெல்லாம் விளக்கிக்கூறி, 'கவிரமலைத் தலைவன்—ஆய் வள்ளலை, கொங்கர் நாட் டரையன் கொடுஞ்சமர் முருக்கிக் கனவிலும் வெற்றி

கொள்ள இயலாது' என்ற உறுதிமொழியையும் விடுத்தனர். எனினும் அந்நாட்டவர் அஃதை அறிந்தாரில்லை.

முதுமொழிக்கூத்தன் :—ஆமாம்; அதுவும் அவர்களது தீவினைச் செயல்தான். ஊழ்வினைப்பயன் உருத்துவந்து ஊட்டின் எவர்தாம் என்ன செய்ய இயலும்? வீண்பெருமைபேசி, வீரங்குன்றுமாறு போரிட்டு, முதுகில் புண்பொருந்த ஓடி, வெட்கி ஒளியத்தான்வேண்டும். (மிகவும் சினச்சிரிப்புடன்) மதிகெட்டவர்கள்! எம் ஆய் வள்ளல், மாரிபோல எவர்க்கும்கொடுத்துக் கொடைமடம் பூண்டானன்றி எத்தகைய போர்வரினும் என்றும் படைமடங்கொள்ளான், என்பதை அறியா அப்பேதையரை என்னென்பது?...யாவற்றிற்கும் எம்வீரன் கை வெற்றிவேலுண்டு...நாம் அஞ்ச வேண்டுவதுமின்று. நமக்கு அஞ்ச வருவது மில்லை.

முடிநாகன் :—(உற்றுநோக்கி) பெரும! நம் படைத்தலைவர் வருகை காணப்படுகின்றது. நாம் வழிபாட்டிற்கு ஆயத்தமாவோம்.

முதுமொழிக்கூத்தன் :—அப்படியே; அடா பூங்குன்றா! (பூங்குன்றனை நோக்கி) கொணர்க இங்குமாலையை. (கூத்தனார் வேண்டுவன செய்து எதிர்நோக்கல்—படைத்தலைவர் இளந்திரையன் படைஞருடன் வருதல்.)

முதுமொழிக்கூத்தன் :—(வணங்கிய கையுடன் வருக எங்கள் படைத் தலைவ! எம் முருகனருட் பெருக்கால், தாங்கள் தோள்வன்மையும், வாள் வலிமையும் பெற்று என்றும் நம் நாட்டிற்குக் குறையாத வெற்றியைத் தருக.

**இளந்திரையன்** :—(முருகவேளைப் பணிந்து கூத்தரை நோக்கி) முதுமொழிக்கூத்த! யாவும் அவன் செயலன்றி ஆகுமா? யான் ஈண்டுறுதற் குரிய செய்தியைத் தாங்கள் முன்னரே ஒருவாறு அறிந்திருக்கலாம். நமது நாட்டின் அமைதியைச் சீர்குலைக்க இதுபோது கொங்குவேந்தன் படையெடுப்பு வந்துளது. நாமறிய அவற்கு இதுகாறும் எத்தகைய இடர்ப்பாடும் கருதியதில்லை. மேலும் அந்நன்றியறியானுக்கு ஒருக்கால் துணையாகவும் அமைந்திருந்தோம். யாது செய்யினும் என்ன பயன்? அவையாவும் கருதாது கைப்பறுப் பேய்ச்சுரைக்காய் போல இதுபோது போருக்கெழுகின்றான் அப்பேதை மகன்.

**முதுமொழிக்கூத்தன்** :—தலைவ! நம்பால் என்றும் முருகன் துணை இருக்க, அவன் என்செய்ய வியலும்? காகம் ஒரு நூறுயிரம் கூடினும் ஒரு கல்லின் முன் நிற்குமோ? அவனுக்கன்றி நாமார்க்கும் குடியல்லேம் ஆதலால், நமனும் நம்மிடை அஞ்சுவான்.

**இளந்திரையன்** :—நன்று! கூத்தரே! நம் படைத்துணை வேண்டி, முருகவேளுக்கு இன்னே வழிபாடியற்றி, யாவும் வெற்றியுற வேண்டுக. (மற்றவர்களை நோக்கி) அன்பர்களே! இறைவன் வழிபாடு நடைபெறும். யாவரும் அணியாக நின்று நம் வெற்றி கருதி வேண்டுக. (கூத்தர் நறும்புகை காட்ட, மலர்தூவி யாவரும் பராவுதல்.)

*வீரங்கொள் வேல்பெற்ற பெரியோனே!*
*வீரர்தங் குலத்துக் குறவோனே!*
*பேர்மிகுஞ் சேவலங் கொடியோனே!*
*பேதையெம் தீவினை களைவாயே!*

*கார்மிகு யானைசூழ் வரைநாட் டின்*
*காவலன் ஆய்எதிர் கடுங்கொங் கன்*
*போர்மிகு தானையோ டிவண்வந் தான்*
*புறமிட்டு நீங்கிட அருள்வா யே.*

*காட்சி க. முடிவு.*

---

## இயல் க. காட்சி உ.

**இடம் :**—*கொங்கு மன்னனது அவைக்கூடம்.*

**காலம் :**—*முற்பகல்.*

**உறுப்பினர் :**—*கொங்குவேந்தன், பெருங்குடிலன், நல்லாயன், வீரநாதன், வச்சிரமுடியான், காவலன்.*

*[கொங்கு மன்னன் தனது படையெடுப்பைப் பற்றி அமைச்சர், படைத்தலைவருடன் ஆய்தல்.]*

**கொங்குவேந்தன்:**—*(அமைச்சனை நோக்கி)* பெருங்குடிலா! என் உள்ளம், ஆய் நாட்டுப் படையெடுப்பில் ஆழ்ந்து கவல்கின்றது. ஆய் பன்னன் அண்டிரன் தன் இளமை தொட்டு, தக்கவரை அடுத்து, கல்வி கேள்விகளிற் சிறந்து உலகியல் முறைகளையும் போர் இயல் நுணுக்கங்களையும் செவ்வனே உணர்ந்துளானும். மேலும் கற்றவர் துணை சூழ என்றும் இருத்தலோடு எவரும் எளிதிற் கொள்ள முடியாதவாறு, தனது அரசிருக்கையை நால்வகை அரணும் பொருந்துமாறும் அமைத்துள்ளானும். இவை பற்றிய நின் கருத்தென்ன?

**பெருங்குடிலன்:**—கொங்கின் கோவே! தாங்கள் எதற்கும் அஞ்சற்க. நெருநல்தான் நம் ஒற்றரின் வழியே அவன் நிலைகள் பலவும் உணர்ந்தேன். ஆய் அண்டிரனுக்குப் பொதியம் முழுவதுங்கூட உரிய

தன்று. அவ்வரையின் ஒருபா லுள்ள 'கவிரம்' என்ற சிறுமலையும் அதனோடு சார்ந்த நிலனுங் காடுமே அவனுக்காகும். மேலும் அண்டிரனது அரசிருக்கை யாகிய ஆய்குடி தக்க அரண்களும் படைகளும் சூழப் புரக்கப் பெறினும், நம் திறன்மிக்க, கூற்று மஞ்சக் கொடுஞ்சமர் புரியும் படையின்முன் அவையாவும் நீரால் அவியுறும் நெருப்புப்போல் ஒழியும்.

**நல்லாயன்** :—அரசர் பெரும! நம் முதலமைச்சர் மொழிந்தன யாவும் உண்மையே எனினும், எதையும் நன்கு ஆய்ந்தே நாம் முயலுதல் முறையாம். போர் எனக் கூறுமுன், நாம், நம் பொருள்நிலை, படைவலி, துணைநலம் இவற்றை நம் மாற்றான் கொண்டுள்ளன வோடு ஒத்து நோக்கவேண்டும். நாம் பெற் றவை நம் மாற்றானினும் மிகுத்து முனைக்குமாயின், போர்க்கெழுவது அறிவுடைமையாகும். நெருநல் இவண் போந்த ஒற்றனை, யானும் சிறிது உசாவ நேரிட்டது. அவன் கூறியவற்றுள் ஒரு சில, என்னை மிகவும அச்சுறுத்தின. ஆய்மன்னன் தென்பாண்டி நாட்டின் ஒரு பகுதிக்கே தலைவன் தான்; தாங்கள் அந்நாட்டினும் நான்குமடங்குபரந்துள்ள இக்கொங்கு நாட்டின் இறைவர் என்பதிலும் ஐயமின்று. எனி னும், இந்நிலப் பெருக்கு மட்டும் வெற்றிக்குப் பற்றுக் கோடாகாது. ஆய்நாடு நில அளவில் சுருங்கினும் பொருள்நிலை, படைத்திறன் இவற்றுள் நம்மினும மிக்கதென வெள்ளிடை மலையென விளங்குகின்றது. இன்னும், வேள் ஆயைப் பாடிச்செல்வார்க்கு அவன் யானையை மற்றைப் பொருள்களினும் மிகுத்து வழங்குகின்றான் என்ற செய்தியொன்றே, அவன் நாட்டின் களிற்றுப்பெருக்கை யுணர்த்துவதால்,

அவன் மிகுந்த யானைப் படையுடையன் என்பதூஉம் அறியலாகும். ஆதலால் தாங்கள் எளியனது புல்லுரையைச் சிறிது உளங்கொண்டு உன்ன வேண்டும்.

**பெருங்குடிலன்** :—(அசட்டுச் சிரிப்புடன்) பெரும! இந்நல்லாயன் என்றும் முற்போக்கின் முட்டுக்கட்டைதான். விரைந்த அறி வெழுச்சி அற்றவன். எத்தகைய சிறந்த யானைப் படையும் பொருள் வலிமையும் நம் கொங்கின் கொடும்படை முன் என்னவாகும் என்பதை இவன் இன்னும் ஓர்ந்திலன். தாங்கள் ஆணைதரின், நம் படைத்தலைவன் வீரநாதனை ஈண்டு அழைக்கின்றேன். அவன் வழியே நம் நிலைமையைத் தாங்கள் எளிதில் உணரலாகும்.

**கொங்குவேந்தன்** :—நன்று முதலமைச்ச! நம் துணையமைச்சர் நல்லாயனார் சற்று மெதுவுள்ளவர் தான். அவரது கருத்து ஈண்டுற்ற செயலுக்குப் பொருந்தாது என்பதே எனது துணிபு. நீவிர் அவ்வீரநாதனை இவண் விரைவிற் கொணர்க.

**பெருங்குடிலன்** :—இறைவ! இதோ அழைக்கின்றேன். (பணியாளனை நோக்கி) காவல! நீ சென்று நம தானைத்தலைவர் வீரநாதனை இவண் கடிதிற் கொணர்க.

**பணியாளன்** :—(வணங்கி) தங்கள் திருவுளப்படியே! (ஓடுகின்றான்.)

**வீரநாதன்** :—(வணக்கத்துடன்) கொங்குப் பெருவேந்தே! எளியனின் வணக்கம் தங்கள் திருவடிக்குரியதாகும்! அடியேனைத் தாங்கள் எண்ணியதெதற்கோ? அறிகிலேன். பொறுத்தருள்க.

**கொங்கன்** :—வீரநாத! நம் படையெடுப்பின் ஏற்பாடு எவ்வாறுளது? ஒரு கணமும் வீண்போக்காது நம் படைத்திறனைப் பெருக்கக் கருதினோமே? நம் போர்ப் படைகள் யாவும் இதுபோது செவ்வியின் அணிவகுக்கப் பெற்றனவா?

**வீரநாதன்** :—பெரும! இதில் ஏன் தங்கட்கு ஐயம்? வீரநாதன் இருக்குமளவும் காலம் வீணாகுமா? நம் நாற்படைகளும், தாங்கள் இதுபோது கருதின் உழுந்து கண்ணடியில் உருளுமுன் இவண் கூடும். இங்கு நிற்கும் நம் அணித்தலைவன் வச்சிரமுடியான் நம் படைகட்கு ஓயாமல் அல்லும் பகலுமாகக் கொடுத்திருக்கும் பயிற்சி சொல்லும் தரத்ததன்று. சுருங்கக்கூறின் நம் படையின் வளர்ச்சி கண்டு, முடியுடை மூவேந்தருள் ஒருவராகிய சேரமானே தளர்ச்சி பெற்றார் எனில், இக்குறுநில மன்னனாகிய ஆய் எம்மாத்திரமாவான்.

**பெருங்குடிலன்** :—வீரநாத! நன்று கழறினாய். (மன்னனை நோக்கி) பெரும! இப்போதாயினும் தங்கள் ஐயப்பாடு தெளிவுறலாகுமென நம்புகிறேன். நம் படைத்தலைவன் வீரநாதனும் அணித்தலைவன் வச்சிர முடியானும் ஒரு படைக்குத் தலைமை பூண்டால் வெற்றியும் புகழும் வேறு எங்குத்தான் செல்லுதற்கியலும்? பெரும! நம் வச்சிர முடியானின் வாயுரைக்கும் தாங்கள் அருளுடன் செவி சாய்த்திடுக.

**வச்சிரமுடியான்** :—கொங்குவளநாட்டின் கோவே! எளியேன் அடிபணிகின்றேன். அடியேன் இயன்ற வரையில் நம் நாற்படைகளும் தத்தம் நெறியில குறைவிலாது பணியாற்றப் பயிற்சியளித்துள்ளேன். ஒவ்வொரு படையும் நம் நாட்டின் உயர்வுக்கும் தங்

களது தகைமைக்கும் நம் குடிமக்களது வாழ்விற்கும் எத்தகைய இடர்ப்பாடும் வராதவழி, தம் முயிர்போமளவும் முன்வைத்த காலைப் பின்வைக்காது, கடுஞ் சமர் புரியும் பேராற்றல் வாய்ந்தது. நம் காலாட்படைஞர் நான்கு திசைகளினும் பருந்துகள் வட்டமிடுமாறு புலால்மணக்கும் கொடிய நீண்ட வேற்படையைக் கையில் தாங்கியுளர். எமனது சிவந்த நாக்குப்போல நாளும் பகைவரது குருதியைக் குடித்தும் வேட்கை தணியாது அலைகின்ற உடைவாளை அவர்களது உறையினிலிட்டு அசைத்துக்கொண்டுளர். காற்றினும் கடுகிச் செல்வனவும் காலன் பற்களினும் கூரியனவுமாய அம்புகளை மிகுதியாகத் தங்கள் தூணிகளில் நிரப்பியுளர். இன்னும், அவர்கள் தங்களது வில்லின் நாணை இழுத்து இடிபோன்ற பேரொலியை எழுப்பிக் கண்டவர் அஞ்சுந் தோற்றமுற்றுளர். நமது குதிரைகள் யாவும் தம இருப்புக் கடிவாளங்களைப் பற்களினால் நெரித்துக்கொண்டு, விரைவு மிக்க கரிய குளம்புகளால் நிலத்தை யுதைத்துப் புழுதியெழுப்பி, உதடு துடிக்க, போர்க்கு ஆயத்தமாயுள. மும்மதங்களைப் பொழியும் முகிற் கூட்டம்போன்ற நம் யானைகள், தங்கள் தங்களது நிழலையே பகைவராகக் கருதி, தமது புலால் வீசும், வளைந்த பிறைமதிபோன்ற கொம்புகளை அசைத்துக்கொண்டு சினந்து நிற்கின்றன. பண்டொருநாள் உக்கிரபாண்டியனுக்கு ஆற்றாது புறமுதுகிட்டு ஓடிய இந்திரனின் கையிற் சிக்கிக் கொள்ளாது, கடற்குள் மறைந்து நின்ற உயர்ந்த மைந்நாகமலை போல, நம் அழகிய உயர்ந்த தேர்கள் தங்கள் பரந்த சிறகுகளை விரித்து, 'வீரப் பெருமக்களே! விரைவில் வாருங்கள்! இம்மென்று கூறுவதற்

குள் யாம் அவ்விந்திரனுலகும் செல்வேம்' எனக் கூறுவன போலத் தம் கொடிகளை யசைத்து நிற்கின்றன. பெரும! இவை யாவும் தாங்கள் நேரிற்காணில் நன்கு விளங்கும்.

**கொங்கு வேந்தன்** :—போர்ப்படைத் தலைவரே! நாற்படையாளரே! யாம் பெரிதும் மகிழ்ந்தோம். நும் போன்ற வீரர்களைப் பெற்ற வெமக்கு இனி யாது குறையுளது? தாங்கள் யாவரும் பெரும்பே றுடையவர்கள். உங்கள் கொங்கின்தேவி இக்குரை கடல் சூழ் ஞாலத்தைத் தன் ஒரு குடைநீழற்கீழ் ஆளுவதற்காக நீங்கள் ஒவ்வொருவரும் ஒற்றுமை குறையாது, தாயினுஞ்சிறந்த அவளது அன்புபெருகிய உளம் மகிழுமாறு, உங்கள் நெஞ்சம் அடக்க இயலா வெய்துயிர்ப்பு அடைய, கண்கள் தீப்பறக்க, புருவங்கள் நெற்றிமேற்செல்ல, மீசைகள் துடிக்க, பற்கள்பொடிபடக் கடித்துச் சினத்தீயை யெழுப்பிப் போர் புரிவீர்கள். ஆதலால் நும்மினும் பெரும்புகழ்படைத்தார் யாவருளர்? நீங்கள்தான், கொங்குதேவியின் கொழுவிய குழந்தைகளாவீர். உங்கள் நலங்கருதி அவள் பவானியாகவும் அமராவதியாகவும் நம்மிடை அசைந்து, நடந்து, நமக்கு நல்லமுது சுரக்கின்றுள். வீரக்குடிப் போர்ப்படைஞரே! உங்கட்கு என்றும் வெற்றி மிளிர்க! வாழ்வு பெருகுக!!

**வீரநாதன்**:—வாழிய பெரும! வணக்கம். தங்கள் உப்பும் சோறும் உண்டு பெருத்த எங்கள் உடல், தங்கட்கு உயர்வும் பெருவாழ்வும் தோன்றத் தொழிற்படாதொழியின், அதனினும் கடைப்பட்ட வேறு ஒரு பொருளைக் காணக்கூடுமோ? மேலும் அவ்வுடலுடன் பொருந்திய உயிர், மறுமையில் நன்றி கொன்ற

மக்கள்படும் துன்பத்துள் மூழ்கி, வெளிவர வியலாது வாடுமே. நாங்கள் போரினபாற் பெறும் புண்கள் யாவையும் புகழ் அறிவிக்கும் கண்களெனக் கொள் வேம்; 'போர்க்குறிக் காயமே புகழ்க் குறிக் காயம்' என் பதை எங்களில் ஒவ்வொருவரும் உணர்ந்து வினை வழித் தொழிற்படும் பெற்றியர். பெரும! புண்படாது உலகில் புகழ் பெறலாகுமா? உலகத்தில் ஒவ்வொரு கணப்பொழுதினும் எத்தனையோ நூறாயிரங்கோடிய பிறவிகள் தோன்றியும் மறைந்தும் ஒழிகின்றனவே? அவையாவும் கருதுதற்கு உரியனவோ? ஆதலால எங்கள் படை யாவும் தம் உயிர்க்கண் அன்பின்றி, தங்கள் நாட்டின் பெருமைக்காக வருந்தி உழைத்து, அதனால் எய்தப்பெறும் பேற்றையே மகிழ்ந்து பெறும் சிறப்புடையவாகும். தலைவ! இதுபற்றிய ஐயம் இங்கு எவர்க்கும் இனி வேண்டுவதில்லை. தாங் கள் அருள் கூர்ந்து இதுபோது நம் பாடிநகர்க்கு எழுந்தருளின் இவை யாவற்றையும் எளிதில் அறிய லாகும்.

**பெருங்குடிலன்:—** மன்னர் பெரும! அதுவே நன்று. தங்கட்குத் திருவுளமிருப்பின் யாம் இன்று மாலை அவண் சென்று நம் படைகளைப் பார்வையிடலாம்.

**கொங்குவேந்தன் :—** நல்லது குடில! அதற்கு வேண்டுவன யாவும் இன்னே புரிக. இன்று மாலை யாம் அவண் எழுந்தருள்வோம்.

**பெருங்குடிலன் :—** வீரநாத! நம்மன்னர் பெருந் தகை நம் பாடிநகர்ச் சோதனைக்கு வருமுன்னர், வேண்டுவன யாவும் சிறப்பாகத் திட்டஞ் செய்யக் கடவீர்; விரைந்து சென்று ஆவன புரியின்.

**வீரநாதன்:**—அவ்வாறே பெரும!(கும்பிட்டு நின்று) எளியேனுக்கு விடையருளவேண்டும்.

**பெருங்குடிலன்:**—சென்று வருக.

**வீரநாதன்:**—வணக்கம் (பணிந்து செல்லுகிறான்.)

காட்சி உ. முடிவு.

---

இயல் க. காட்சி ங.

**உறுப்பினர்:**—வேள்ஆய் அண்டிரன்; நற்குடிவேள்; திருமேனி; இளந்திரையன்.

இடம்:—பாடிநகர்: **காலம்:**—மாலைப்போது.

[ஆய்வேள் கொங்கனின் சிறுமை நோக்கி இகழ்தலும் பிறகு தன் படைத்தலைவனுக்குப் பரிசு வழங்கலும்.]

**ஆய்வேள்:**—(போருடை பூண்டு நிற்றல்) உலகம் மகிழ, ஓங்கு நலஞ்சுரக்கும் உண்மைப்பொருளே! பெருங்கருணைப் பெருமானே! என்னே இவ்வுலகத்தின் மாண்பு? நீர்க்குமிழியன்ன இளமையும், நெடுந்திரைபோன்ற செல்வமும், நீரின் எழுத்தாகும் உடலும் என்றும் அழிவுறுதனவென மயங்கலாகுமோ? 'நேற்று வாழ்ந்து மகிழ்ந்த ஒருவன் இன்று உயிரற்றுப் போனான்' என்ற சொல்லையே தன்பெருமைப் பேரணியாக இப் பூவுலகு பூண்டிருப்பதை, தெளியக் காணுதற்கு விழிகளிருந்தும், ஒருநாளும் அதை நோக்காது வாழ்நாட்கள் யாவும் வீணுட்களாகச் செலவிடுவது நன்றாகுமா? நாக் குழற, கண் சுழல, காது செவிடுபட, மேலுயிர்ப்புக்கூடி, காலன்திசை நோக்கி வருந்துநாள் கூடுமுன், வீட்டுநெறி நாடி நல்வினையில் உளத்தைப் பதிக்காது, என்றும் அழிவுறும், இழிபொருள்கட்கு ஏக்கங் கொண்டு மானம், மறு

மைப்பயன், இவற்றை எள்ளளவும் உள்ளத்திற் கொள்ளாது உண்டுடுத்து, உயிர்த்துறங்கும் ஒருவன் உலகெலாங் கட்டி ஆளினும்—சீ! அஃது ஒரு பேருகுமா? அறவினையால் பெற்றவொன்றினையே உளமுவப்பக்கொண்டு, நல்வினை ஓம்பி, அல்வினை கடிந்து, வறியாரைப்புரந்து, வாழ்கின்றவனன்றோ எத்தகைய தாழ்ந்த மரபிற் பிறந்திருப்பினும், உயரிய தகுதியும் உலகு போற்றற்குரிய புகழும் படைத்த பெருமகனாவான். அவனாலன்றோ புனலும் பூமிசைப் பொழிகின்றது; மன்னுயிர்களும் தழைக்கின்றன. (அமைதியுடன் குனிந்து சற்று உலாவல்) அருட்குணக்குன்றே? யான் எந்நாளும் அக்கொங்கனுக்கு ஓரிடரும் கருதியதில்லையே; முன்பொருநாள், இந்நாட்டினின்று மணமிக்க சந்தனப் பேழைகளும், களிற்றுக் கொம்புகளும், பிறவும் அவன் விழைந்தவாறே போதும் போதுமென அவா அடங்கிப் புகலுமளவும் நான் கொடுத்தபோது 'ஆய் நாட்டுமன்னன் என் தாய் நாட்டுத்தோழன்' என வாயார வாழ்த்திய அக்கயவனுக்கு, இப்போதுற்ற கேடுதான் என்னையோ? உள்ளத்தில் கள்ளமும், உதட்டில் வெல்லமும் கொண்டுள்ள அத்தியமகனும் ஒரு நாட்டு மன்னனாம்? தீமை! தீமை!! ஊழ்வினையை வெல்ல யாரால்தான் ஆகும். (வீரத்தோடு நின்று சினத்தால் பற்களைக் கடித்தல்) பேய்மகனே! ஆய்நாட்டு அண்டிரனது ஆண்மை மிக்க போர்த்திறனை நன்கு அறியாது இவண் போர்க்கு எழுந்தனையா? கூற்றுவனும் என் முன் ஆற்றாது தோற்றுக் காற்றெனப் பறப்பானெனில், பேதை மகனாகிய நீ எற்கு எம்மாத்திரம்? நன்று! நன்று!! (அமைதியுறல்) எனது படை யிது

காறும் பகைஞருடன் போரிற் கைகலந்திருக்கும். இன்னும் ஒரு நாழிகைக்குள் எனக்கு வெற்றிச் செய்தி கிட்டாதாயின், யானே அவண்சென்று என் மாற்றலர் தம்முயிரைக் கூற்றெனக் குடிப்பேன். (புறம்நோக்கி) எங்கே என் அமைச்சர்? (அமர்தல்).

நற்குடிவேள்;—(வந்து ஆய்முன் வணங்கி) என் தலைவ! யான் இங்குத்தான் இருந்தேன். மன்னித்தருள்க! தங்கள் சினம் தணிவதாகுக! பெரும! நம் படைகள் வீர முழக்கத்துடன் போர்க்களஞ் சென்ற போது, நமக்கு ஒன்றன்பின்னொன்றாகத் தொடர்ந்து, நன்னிமித்தங்கள் பல தோன்றின. மேலும் என்றுமில்லாத ஓருவகை எனது உளத்துள் கடலெனக் கரை புரண்டெழுகின்றது. இதனால நம் வெற்றியின் உறுதி புலனாகின்றது.

ஆய்வேள் :—நன்று அமைச்ச! அவ்வாறே ஆகுக. நீ, ஏதேனும் நம் மாற்றலரின் நிலையினை யுணர்வாயோ?

நற்குடிவேள் :—பெரும! ஒரு சிறிது அறிவேன். அருளுடன் செவிசாய்த்திடுக. நமக்கு 'கொங்குமன்னன் ஆய்நாட்டைப் பற்ற தன் நாற்படையுஞ் சூழ ஆயத்தமாயுளன்' என்ற செய்தி கிட்டியவுடன் நம் ஒற்றன் திருமேனியை அவனது படைத்திறனை அறிந்து வருமாறு அனுப்பினேன். அவனும் அவ்வாறு அவண்சென்று உளவு அறிந்து, அப்படைஞர் நம் எல்லையை அணுக ஆறு நாட்களின் முன்னரே என்னிடமும் நம் தானைத் தலைவர் இளந்திரையனாரிடமும் யாவும் விளங்கக் கூறினன். அஃதாவது "கொங்கர், நமது படையை விடப் பதின்மடங்கு பொய படையைப் பெற்றிருப்பினும் அதன் தலைவனும்

அணி முதல்வனும் நம்மவருடன் ஒப்பிடின் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேற்றுமையைத் தருகின்றது" என்றனன். மேலும் "கொங்கரது காலாட் படையின் அணிவகுப்புமுறை, நம்மவர் அதற்குள் எளிதிற் புகுந்து சிதறடிக்கக் கூடியவாறுளது" என நம்படைத் தலைவரும் இன்று செய்தியனுப்பியதோடு, "தாங்கள் எதற்கும் அஞ்சவேண்டுவதில்லை. வெற்றி நமக்கே யுண்டு" என்று உறுதிமொழியும் விடுத்துளார்.

**ஆய்வேள்** :—நன்று; அமைச்ச கூறியன எனக்கு மகிழ்ச்சியைத் தருகின்றன. மேலும், நம் படைஞர் மிக்க ஊக்கத்துடன் போர்முனையில் நின்று செருவாற்றும் திறனைபெற்றவராவர், என்ற உறுதி எனக்கு இருப்பினும், நான் நேரே அவர்களது திறனைக் காணாது இங்கிருக்க உளம் வரவில்லை. புறப்படுவாய். நாம் இருவரும் போர்க்களஞ் சென்று நமது படைத் தலைவரும் அவரின் துணைப் படைஞரும் வீரத்துடன் பகைஞரைத் தாக்கிப் போர் புரியுமாறு ஊக்குவிப்போம்.

**நற்குடிவேள்** :—பெரும! தாங்கள் கூறுவதும் நலனே. தங்கள் திருவுளப்படியே யானும் வருகின்றேன்.

**ஆய்வள்ளல்** :—நற்குடிவள்ளால்! நாம் போர்க்களஞ் செல்லுமுன் நம் போர்த்தெய்வமாகிய வீரமாதேவியையும், நம் குலக் கடவுள் முருகவேளையும் நமக்கு வென்றியும் புகழும் மிகுமாறு, வழிபட்டுப் பரவுவோம்.

**நற்குடிவேள்** :—அண்ணலே! அவ்வாறே தொழுவோம்.

(நற்குடிவேள் ஆயுடன் வழிபடல்.)

## பாட்டு

தேவி செந்தமிழ்த் தாயே பராவுதும்
ஆவி தந்தருள் வாளே பராவுதும்
தேரும் ஆய்குடி வாழ்வே பராவுதும்—திரளான
தேர்கரிபரி காலாட் படையுடன்
பார்பெ ருஞ்சம ராலே நமைவெல
தேரும் கொங்கனும் போரில் முதுகிட— அருளாயே
கூவி டும்மடி யார்கள் துயரற
நீனி றமயின் மீது வருந்திரு
கூர்வ டிவேலன் தாயே பராவுதும்—பலகாலும்
கூடி டும்மொழி செய்கை உளமொடு
பாடு நின்னடி சூடு மடியனின்
கூடும் வெவ்வினை யோட அருள்தரும்—உமையாளே.

[ஆயும் அமைச்சனும் தலைவணங்கி நிமிர்தல்.]

**நற்குடிவேள் :**—ஆ! பெரும, நம் ஒற்றன் திருமேனி, இதோ மிகவும் விரைவாக வருகின்ருன். அவனது நடைவிரைவை நோக்கின் வெற்றிக்குறி தோற்றுகிறது. (ஒற்றன் ஓடிவந்து இருவர் முன் வணங்க) வருக! திருமேனி! நமக்குக் 'கனி'தானே?

**திருமேனி :**—'கனி' தான், பெரும! (ஆயை நோக்கி) தங்கள் அடி என் முடிமேலாக்க அருள்க. நாம் கனி கொள்வதன்றிக் காய்பெறுவதில்லையே. மேலும், 'காய்' என்பது 'நீ செருக்களஞ்சென்று பகைஞர் கெடுமாறு நின் சினத்தீயால் சுட்டெரிக்க' என்ற பொருள் தருமே யன்றி வேறொரு வகையுமுண்டோ?

**ஆய்வள்ளல் :**—ஒற்ற! நன்று கூறினுய்; நின் நற்செய்தி என்ன? போர் நிகழ்ச்சி எவ்வாறுளது.

**திருமேனி** :—எம் குலநலந் தேடுங் கொற்றவ! நம் படைகள் இன்று கொங்கரோடு கைகலந்த அளவில் ஊழிப்பெருநாள் போல எங்கும், பேரொலியும் பெரு முழக்கமும் கேட்டவர் நெஞ்சம் திடுக்கிடுமாறு எழுந்தன. மேலும் நாற்றிசையிலும் 'விடும் தொடும்' என்பாரும் 'வெட்டு, குத்து' என்பாரும், 'கொல், எய்' என்பாருமாகத் தோன்றினர். எள் விழவும் இடமின்றிப் படைகள், ஒன்றோடொன்று கலந்து பிணைந்து போர் புரிந்தன. மலைகளும் மலைகளும் பொருதாலென்னக் காணப்பெற்றன தேர்ப்படைகள். முகிற் கூட்டங்கள மின்னிப் பெரு முழக்கத்துடன் பொழிவது போன்று, யானைப் படைகள் தம் வெள்ளிய கொம்புகளால் பகைவர்களைக் குத்தி வீர முழக்கஞ் செய்து மும்மதம் பெருக்குகின்றன. பெருங் கடலிற் புரண்டோடும் பேரலைகளை யொப்ப நமது குதிரைகள் மாற்றலர்தம் படைக்குழுவில் தாவிப் பாய்ந்து சமர் முருக்குகின்றன. கடல் மடை திறந்ததைப்போல நமது படைகள், சீற்றத்துடன் அம்புகளை வாரி இறைத்துப் பகைவரின் வலிமையை ஒடுக்கிக் குறைத்தன. பெரும! இவை யாவும் ஒரு நொடிப் பொழுதில் நிகழ்ந்தன. ஒரு முறை கண் மூடித் திறப்பதற்குள் எத்தனை தலைகள் உருண்டன! அடடா! சொல்லொணாது. ஆய்நாட்டாரின் வலிமையை இதுபோது நன்குணர்ந்துள்ளார்கள் அக்கொங்கர்கள். அவர்கள் வலியிழந்து புறமுதுகிட்டு ஓடிய ஓட்டம் ஒரு வேடிக்கையாகவே இருந்தது. இனிமேல் நம்மை ஏறெடுத்தும் பாரார்; நாம் வாழும் திசைநோக்கித் தலைவைத்தும் சாயார். இத்துணைச் சிறுபொழுதுக்குள் அக் கொங்குமன்னன் எஞ்சிய படையுடன் நம்

படைக்கு ஆற்றாது புறமுதுகிட்டு ஓடுவான் என்று நாம் கனவிலும் கருதவில்லை. தீவினையின் விளைவு! போர் என்றால் 'பொரி கடலை உண்பது' எனக் கருதி ஞன் போலும்.

ஆய்வள்ளல்:— போதும் நின் விளக்கம். தம் நிலையில் தாழ்பவர் இவ்வாறு தான் படநேரும். என்பால் நண்பனாக நடித்து, உண்ட வீட்டுக்கு இரண்டகம் கருதும் அவன் செயலுக்கு நல்ல பரிசு பெற்றான். விதியை மதியால் வெல்லலாகும் எனினும், ஊழ்வினை உருத்துவந்து வினைசெயின் அதனைத் தடுக்க எவரால் தான் ஆகும்? நன்று ஒற்ற! நம் படைத்தலைவர் இளந் திரையரை இவண் விரைவில் அழைத்து வருக?

திருமேனி:— பெரும! அவ்வாறே கொணர்கின் றேன் (வணங்கிச் செல்லல்—படைத்தலைவன் வருதல்)

இளந்திரையன்:— (வணக்கத்துடன்) ஆய்குடிப் பெருவள்ளலே! வணக்கம். நம் பகைஞன் கொங் காள்வான், இனி நம் நாட்டின் பெயரைக் கேட்ட அளவிலேயே நடுநடுங்கி வெய்துயிர்த்து அஞ்சு நிலையில், இன்று புறங்காட்டித் தோற்றோடினான். பெரும! இவை யாவற்றிற்கும் நம்மிறைவனின் திருவருட் டுணையேயன்றி வேறல்ல.

ஆய்வள்ளல்:—இளந்திரைய! நின் செயல் என்னைப் பெரிதும் களிக்கச் செய்கின்றது. நீயன்றோ இந்நாட் டினைப் புரக்கும் வீரன் ஆவாய். நம் நாட்டின் பகைஞர் இனி ஆய்குடிப் படையெனில் தம் அடிவயிற்றில் நெருப்பையன்றோ கொள்வர். 'இளந்திரை' என்றால் 'இடியொலி கேட்ட நாகம்' என்றல்லவோ அஞ்சுவர். நமது பெருமை, தாய்நாட்டுப்பற்று, ஆய்குடிவேள் மரபின் உயர்வு, இவற்றிற்காக நீ புரிந்த அருந்தொண்

டினைப் போற்றுகின்றேன். இன்றுமுதல் நினக்கு எனது அவைக்கண் இருக்க ஓர் அரியணையும் வெளிச் செல்லுங்கால் பொற்பல்லக்கு, ஈச்சோப்பி, நளிமுரசு, களிற்றுப்படை, முதலிய விருதுகளும் தந்தனம். மேலும் இன்றுமுதல் நின்பெயர் 'கொங்குக் கூற்றன் தமிழவேள் இளந்திரை'—என அமைவதாகுக. நமது ஆய்குடித் தோன்றல்—வீரமாச் செல்வன்—கொங்குக் கூற்றன்—தமிழவேள் இளந்திரை—எமது போர்த் தெய்வமாகிய வீரமாதேவியின் அருளாலும், எங்குலக் கடவுள் குமரவேளின் கருணையாலும், நாளும் புகழ் பரப்பி, குறைவிலாப் பன்னலங்கள் சூழ வாழ்க. யாவரும்—வாழ்கவே.

(*மன்னன் இளந்திரையனுக்கு முத்துமாலை சூட்டித் தனக் கருகேயுள்ள அரியணைமீ தேற்றல்.*)

**இளந்திரையன்:**— எனது அன்பிற்குரிய அம்மை, அப்பன், ஆசான், ஆன்றோன், ஆண்டவன் ஆய ஐம் பெருங் குரவர்தம் தன்மை வாய்ந்த அண்ணலே! நின் பூங்கழல் எந்நாளும் எனது திருமுடிக்கு அணி யாகுக. தாங்கள் அடியேனுக்கு அருளிய இத்தகைய பெரும் பேற்றிற்கு உரிய தகுதிவாய்ந்த பேரறிஞர்கள் பலர் இவண் இருக்கவும், என்பாலுற்ற பேரன்பினால் என்னையும் ஒரு பொருளாக்கி ஏற்றமாயளித்த இச் சிறப்பிற்கு யான் எழுமையும் நன்றியறி யுடையேனு வேன். (**அவையோரை நோக்கி**) பேரன்பர்களே! பெருங் குடி மக்களே!! எளியன் இன்றைய போரில் பகை வரைப் புறமுதுகு இடச்செய்து வாகைசூடி, வீரக் கொடி உயர்த்தியமை—ஈண்டுள்ள வீரப் பெருமணி களாகிய படையணித் தலைவர்களது துணைவலியின்றி யாகுமா? 'ஒருவர் உழைக்க மற்றவர் பெயர் வாங்க'.

என்பதுபோல யான்பெற்ற இப்பேறு அனைத்தும் என் துணைவர்களாய இவ் வணித்தலைவர்கட்கே உரியதாகும். எவர் எவ்வாறு போர் புரியினும், நமது மன்னன் 'காட்சிக் கெளியனாகி—கடுஞ் சொல்லற்று' நீதிநெறி யுணர்ந்து, மக்கட்கு எவ்வகைத் துன்பமும் தோன்றாது புரந்து, வேண்டுவார்க்கு வேண்டுவன அளித்து முகமலர்ச்சியுடன் செங்கோல் செலுத்தி, தளர்ச்சியுற்ற குடிமக்களைப் பெரிதும் பேணி, அற வினைகளை அல்லும்பகலுமாகச் செய்தலால் 'வெற்றி' எனும் வீரமாது வேறெவரையும் கருதாது வேள் ஆய் மன்னனையே என்றுந் தன் இன்ப மகனாகக்காதல் கொண்டு இலங்குகின்றாள். இத்தகைய . நம் வேந்தன் பன்னலமும் துய்த்துப் பல்லாண்டு வாழ நம் பார்வதி மகனும் குமரனைப் பரவுவோமாக. (உயர்ந்த குரலில்) வாழ்க எம் மன்னர், வாழ்க எம் நாடு.

**யாவரும்:**—வாழ்க, வாழ்கவே. [வணங்குதல்].

காட்சி முடிவு.

---

## இயல் உ, காட்சி க.

**உறுப்பினர்:**— காவலன்; பொற்பூங்கோதை; இன்ப வல்லி; இறை மணி; ஆய்.

**இடம்.**—பொதிகைவரையின் ஒரு பக்கம்.

**பொழுது:**—மாலைப்போது.

[வேள் ஆய் வேட்டைக்குச் சென்றவிடத்து, பொதிகை வேள் மகள் பொற்பூங்கோதையைக் கண்டு காமுறுதல்]

**காவலன்:**—ஏ! அப்பா! என்ன சங்கடம். போதும் போதும். இம்ம்! இப்படி இன்னும் இரண்டு நாளைக்கு நடைபெற்றால், ஐயா பாடு அவ்வளவுதான்!

சுவர்க்கம் உடனே கிட்டிவிடும். என்ன அலைச்சல், எங்கெங்கே ஓடுதல். பள்ளத்தைப் பார்த்தேனா, மேடென்று கண்டேனா? புதரென்று உண்டா? முள்ளென்று உண்டா? மலையென்று உண்டா? ஆறு என்று உண்டா? அப்பப்பா இன்று எழுந்தபொழுது எந்த மூதேவி மகன் முகத்தில் விழித்தேனோ. அறியவில்லை? என்ன செய்வது? கழுதை வயிற்றில் பிறந்தால் பொதிசுமக்க அஞ்சலாமா? இருந்தாலும் நமது மன்னர் சற்றுத் தயவுள்ளவர்தான். நான் பல்லைக் கடித்துக்கொண்டு, நொண்டி நொண்டிக் காலிழுக்கப் பெற்று ஓடுவதைக் கண்ணுற்றுத்தான் நமக்கு இங்கே இருக்குமாறு ஒய்வுதந்தார் போலும். இருந்தாலும் இனிமேல் இப்படிப்பட்ட வேட்டையின் போது மெதுவாக விடுதிபெற்று வீட்டிலிருப்பது தான் என்போன்ற வீரர்கட்கு அழகாகும். நான் நம் மன்னனது அரண்மனைப் புறத்துள்ள, பழக்கி வைக்கப்பெற்ற யானைகள், கரடிகள், ஓநாய்கள், சிறுத்தைகள், கருங்குரங்குகள், முள்ளம் பன்றிகள் முதலாய எத்தனையோ கொடிய விலங்குகளை எல்லாந் தாம் பார்த்தேன். இருந்தாலும் இந்நெருங்கிய காட்டுக்குள்ளே—கதிரவனின் ஒளிகூடப் புகுதற் கியலாத புதர்களிலிருந்து, நமது வேடர்கள் பட,பட-பட, படவெனப் பறைகளைக் கொட்டி முழக்கி அவர்களது கொம்புகளைக்கொண்டு 'உம்ம்ம்' என ஒலிகளை ஊதி எழுப்பும்போது—ஒன்றா? இரண்டா? நூற்றுக் கணக்கிலல்லவோ புலிகளும் கரடிகளுமாக நம்மைச் சூழ்ந்து ஓடுகின்றன. அவைகளது பார்வை! அம்மம்ம இடுகாட்டையல்லவோ காட்டுகின்றது. இத்தகைய கொடிய விலங்குகளை எண்ணுவதே ஒரு வீரம்—

எண்ணியதும் வேட்டைக்குச் செல்லத் துணிவதே அதனினும் மிக்கது. வேட்டையின் போது அவற்றைக் கண்டு அஞ்சாதிருப்பதே அதனினும் மேன்மையாயது. பின்னர், அவற்றின் பின்னே 'மனோவேகம் காற்றுவேகமாக'த் துரத்திச் சென்று பள்ளம்—மேடு; முள்ளு—முரடு; காடு—கரை என்பன யாவும் கருதாது, உருண்டு புரண்டு ஓடி, யமனைப்போல் அவற்றைக் கொன்று திரும்புவதென்றால் உண்மையில்—உறுதியாக—ஒரு பெரிய வலிமை மிக்க—திறமை வாய்ந்த—அஞ்சாத நெஞ்சம்படைத்த வீரனால்தான் ஆகும். என்னைப் போன்றவர்கள் இதைப்பற்றி வாயினால் பேசவே கூடாது. வேட்டையென்றால் அவர்கள் பாட்டைப் பார்த்துக்கொண்டு போவதுதான் மேல். ஏதோ எனது உயிர் கொஞ்சம் கெட்டிதான். இல்லாவிடில் அந்தக்கொடிய விலங்குகள் அங்குமிங்கும் ஓடும்போது, அவற்றைக் கண்டு ஓடி ஒளிக்கத் தலைப் படுகையில் இடறிக் கீழேவிழுந்து அவற்றிற்கு இரையாகாமல தப்பித்தேனே. அது போதாதா? நம்மிடத்தில் கடவுளுக்குச் சிறிது கருணை இருக்கிறது. போகட்டும்... இந்த இடத்தில் அப்படிப்பட்ட தொந்தரவுகளொன்றும் இருக்காது என்று எண்ணுகிறேன். மேலும் நமது மன்னரும் இதுவழியாகத்தான் வர வேண்டும். அதற்குள்ளாக இங்கு எங்காவதுஒதுக்குப் புறமாக, நாம் ஓர் உறக்கம் போடுவது சற்று உடம்புக்கு நல்லதெனக் கருதுகிறேன்—'ஆ...ஆவ்வ்வு' (கொட்டாவி விடுதல்) இதற்குள் கொட்டாவியும் வருகிறது; சற்று இப்படிக் கிடந்தால் என்ன முழுகிப் போகிறது.

[ஒதுக்குப்புறமாக இருந்து அயர்ச்சிக் குறிகாட்டித் துயிலுதல். பிறகு அங்கு ஆயவெள்ளம்சூழ 'பொற்பூங்கோதை' வருதல்].

**பொற்பூங்கோதை:**—[தோழியை நோக்கி] ஏடி, இன்பவல்லி! இதோ விரைவில் வருகிறேன் என்று சென்ற நமது 'இறைமணி' எவ்வளவோ நேரமாகியும் இன்னும் வரவில்லை பார். எனக்கு முன்னமேயே நீ அவளைச் 'செல்' என்ற போதே தெரியும். தடுக்கக் கூடாதே என இருந்தேன்—அவள் ஒரு பெரும் பேதை. சுறுசுறுப்புடன் எவற்றையும் புரியாள். போனோம், வந்தோம் எனச் செய்தியைக் கொண்டு வந்தாலன்றோ நமக்கு அவளிடம் மதிப்பு வரும்.

**இன்பவல்லி:**—அன்னாய்! சினம் கொள்ளற்க. நம் தோழி இறைமணி மிகவும் திறமையானவள். அவளது அலுவலில் எவரும் ஒரு சிறு குற்றமுஞ் சொல்ல மனம் பொருள். அவள் தவருது விரைவில் யாவும் நன்குணர்ந்து, செய்தி கொணர்வாள் பாருங்கள். மேலும் நான் இன்று எனது வீட்டை விட்டுப் புறப்படும் போதே, எனது தம்பி, நமது பொதிகைவரையின் சாரலில் கவிர மன்னன் இன்று வேட்டைக்கு வருவான் என்று கூறினன். நான் அதுபற்றி அவனிடம் விளக்கமாகக் கேட்கவில்லை. ஒருக்கால் அம்மன்னன் வேட்டையின் போது விலங்குகளைக் கலைப்பதற்கு எழுப்பிய ஒலியே நமக்குக் கேட்டாலும் கேட்டிருக்கலாம். யாவும் அவள் வந்தால் விளங்கும்.

**பொற்பூங்கோதை:**—நல்லது; அவள் வரும்போது வரட்டும். நாம் பேசி என்ன பயன். இவை யாவும் அவள் காதிலே விழவாபோகின்றன—எனக்குக் கால் விரல்களும், கைகளும் வலியெடுக்கின்றன; சற்றுக்

களைப்பாகவும் இருக்கிறது. மேலும் இந்த இடத்தில் நல்ல தென்றல்காற்று மிகுந்த நறுமணத்துடனே வீசுகின்றது. அவள் வரும் வரையில் நாம் இங்கேயே இருந்து இளைப்பாறலாம்.

**இன்பவல்லி**:—தேவி! அவ்வாறே இருப்போம். (அவர்களிருத்தல்.) அதோ பார்த்தனையா, நங்காய்—நமது குன்றின் சரிவிலுள்ள அந்த வேங்கை மரத்தை? அதன் அழகிய மலர்கள் நம் கண்களுக்கு எவ்வளவு இன்பந் தருகின்றன. மேலும் அதன் பூந்தாதுகள் பக்கத்தே உள்ள பாறைகள்மீது உதிர்ந்து மிகுந்த அழகான மஞ்சளோடு செவ்விய நிறங்காட்டிக் கிடப்பதை நோக்கின், ஒரு மணவிழாவின் போது விரிக்கப் பெற்றுள்ள செம்மணிக்கம்பளமென்ன விளங்குகின்றதே. தேவி, இங்குப்பார். நமக்கு அயலில் படர்ந்துள்ள அக் காக்கணங்கொடி பச்செனத் தழைத்துத் தன் நீலமலர்களை விழிகள் போலப் புறம்பே தோற்றுவித்து மிளிர்கின்ற காட்சி, நம் மலையிடத்துள்ள ஓர் அழகிய மயில் தனது நெடிய தோகையினை விரித்து ஆடுவதை ஒப்பத் தோற்றுகின்றதே.

**பொற்பூங்கோதை**:—ஆமாம், ஆமாம்! அப்படித்தான் இருக்கின்றன. நீ ஓர் இயல் நூல் புலமைமிக்க மெல்லியளே யாவாய். உனக்கு ஆண்டவனின் திருவருட்செயலைக் கண்டுகளிக்கும் பேறு வாய்த்துளது. பொதுவாக, மக்களாவார் இயற்கையில் ஆண்டவனால் நமக்கு எளிதாக அளிக்கப்பெற்ற, என்றும் நலங் கெடாப் பொருள்களை விடுத்து, குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக்கொள்வதை யொப்ப, கண்ட கண்ட செயற்கைப் பொருள்களிடத் துள்ளவற்றையே இன்பப்பொருளாக நுகர்ந்து, முடிவில் நோயும் பொரு

ளழிவும் பெற்று, நெருப்பைப்பழமெனக் கருதி அதன் மீது விழுந்து சாவும் விட்டிற்பூச்சியென மாளுகின்றனர். எவர்க்கும் இயற்கையால் வரும் வாழ்வே பேரின்பமாகும். இறைகளோடிசைந்த இவ்வின்பமாவது, இன்பத்தோ டிசைந்த வாழ்வாகவன்றோ நம் பெரியார்கள் கண்டனர். ஆதலால் நீ கூறியன யாவும் என்னை மகிழ்விக்கின்றன.

**இன்பவல்லி:**—தேவி, தாங்கள் கூறுவதை யொப்ப நான் ஓர் இயல்நூல் புலமை மிக்கவளாயின் தாங்கள் ஓர் இறைநூல் புலமை வாய்ந்த கோதையரன்றோ?

**பொற்பூங்கோதை:**—தோழி! அஃதிருக்கட்டும்: நமக்குள் இவ்வாறு பரிமாற்றம் வேண்டா! எனக்கு உன் பாட்டைக் கேட்க ஆவல் மிகுதியாக வுளது; எங்கே, ஒரு பாட்டுப் பாடுக—கேட்போம்.

**இன்பவல்லி:**—அம்மையே! அவ்வாறே பாடுகின்றேன். (பாடுகிறாள்.)

*திருவுமெய்ப் பொருளோடுஞ் செல்வமு நல்குஞ்*
*சீர்மிகு நின்கழல் பேறெனக் கொண்டு*
*ஒருவரையு மதியேன் ஓங்கழற் பிழம்பே*
*உற்றேநா னின்னடி பெற்றேன் பேரின்பம்*
*கருமுகி லசைவிலா வரைமீது மயின்மேல்*
*கற்புடை வள்ளிதே வானையோ டாடி*
*தருதுயர் வினைகெடத் தரணியைக் காப்பாய்*
*தண்ணளி யுடையஎம் பொன்னொளி முருகா!*

**பொற்பூங்கோதை:**—என் இனிய இன்பவல்லி! நினது இயல் நூல் புலமையை எவ்வகையினும் முன் விடாதவாறு இசைப் புலமை நின்பாலமைந்து இருப்பதை நோக்கின்—பொன்மலர் நாற்றம் பெற்றதாகவே உணர்கின்றேன். நின்குரலின் இனிமையும்

பாட்டின் செம்மையும் என் உளத்தை நன்னிலைப் படுத்தின. சேடி, அதோ வருபவள் யார்? நம் 'இறைமணியா'?

**இன்பவல்லி:**—ஆமாம் தாயே, அவள்தான் வருகிறாள். என்ன நடை! மிகுந்த மகிழ்ச்சியுடன் வருகிறாளே! ஏதோ, ஒரு நல்ல செய்தி கொண்டு வருகின்றாள் போலும்.

**பொற்பூங்கோதை:**—(இறைமணி அணுகுதல்) அடியே இறைமணி! உனக்கு ஏன் இவ்வளவு தாமதம்? விரைவில் வருகின்றேன் என்று ஓர் ஆண்டின் எல்லையையல்லவோ குறிக்கின்றாய்? ஏடி, உனக்காக நாங்கள் இப்பூங்காவில் எவ்வளவு நேரம் காத்திருப்பது? அலுப்புச்சலிப்பு என்பது எங்களுக்குக் கிடையாதென்று நினைத்தாய்.

**இறைமணி:**—என் பெருமாட்டி, என்னை மன்னித்து அருளவேண்டும். விரைவில் வர எவ்வளவோ முயன்றும் சென்ற நிலையில் யாவும் உணராமல் விரைவில் வர இயலவில்லை. நான் முழுதும் தக்கவாறு உணராது இவண் திரும்பினால் என்னை ஏளனம் செய்வீர்கள் என அஞ்சியே, காலம் செலவழிந்தாலும் நன்குணர்ந்து செல்வதே நன்றெனா, இருந்து வந்தேன்.

**இன்பவல்லி:**—தேவி! அறிந்தீர்களா. யான் முன்னமேயே தங்கட்குக் கூறினேனே; 'அவள் யாதொன்றையும் நன்கு ஆராய்ந்து வருபவள்; அதனாலேயே இவ்வளவு நேரம் ஆகின்றதென்று' (தோழியைப் பார்த்து) நல்லது, இறைமணி! நீ மிகவும் திறமையானவள் தான். நீ சென்ற செய்தி என்ன? நமக்குக் கேட்ட ஒலியின் வரலாறுதான் என்ன?

இறைமணி:—நங்காய்! கூறுவன் நான். நம் செவிப் புலம்புக்க ஒலிவழியே நெடுந்தூரஞ் செல்லு முன்னே ஒரு சிறு பாறை தோன்றிற்று. அதன்மேல் நின்று பார்த்தபோது நம்பொதிகை யருவிக்கரையில் ஒரு கூட்டம் தோன்றியது. நான் அதைக் கண்டது அஃது என்ன என்பதே விளங்கவில்லை. பின்னர் அக் கூட்டம் மெதுவாக நகர்ந்து நான் நின்ற பாறை வழியே சென்று நேற்று நாம் தங்கி ஊசலாடி, சுனை குடைந்து, தென்றல் நுகர்ந்து களித்த அப்பெரிய ஆலின் கீழேயே தங்கிற்று. அக் கூட்டத்திலுள்ள யாவரும் களைப்புற்றவர்களாகக் காணப்பெற்றனர். சற்று நேரம் கழிந்ததும், பல வேடர்கள் அம்பேறி மாண்ட கொடிய வேங்கைகள், மான்கள், பன்றிகள். இவற்றைக் கொண்டுவந்தமையைக் கண்ணுற்றேன். அதன் பின்னர்தான் எவனோ ஒரு மன்னன் வேட்ட மாட வந்தான் போலும் எனக்கருதினேன். அதற்குள் அக் கூட்டத்தினர் யாவரும் மிக்க மகிழ்ச்சியுடன் "நம் வேட்டமும் விளைவும் சிறக்க, ஆய் மன்னர் வாழ்க!" என்று கூவினர்.

இன்பவல்லி:—ஏடி, இறைமணி—நீ ஆய் மன்னனைக் கண்ணுற்றாயோ?

பொற்பூங்கோதை:-அவள் முடிப்பதற்குள் உனக்கு ஏண்டி இவ்வளவு விரைவு! மேலே நீ சொல்லடி இறைமணி.

இறைமணி:—நான் நன்றாக ஆய் மன்னனைக் கண்டேன். பிறகு நான் பாறையை விட்டிறங்கிப் பொதிகை யருவிக் குவட்டிலிருந்து கண்டபோது அவர் எனக்கு மிக்க அண்மையில் இருந்தார். அவர் விழிகள் செந்தாமரை மலரென்ன விளங்கின. அடிக்

கடி தன் புடையிருந்தவருடன் உரையாடிப் புன்னகை அரும்பிய வண்ணமாகவே இருந்தனர். அகன்ற நெற்றியும், உயர்ந்த தோள்களும், விரிந்த மார்பும், நீண்ட கைகளுங் கொண்டு ஆண்மையும் வீரமும் நிறைந்த தோற்றத்துடனே அவர் வீற்றிருந்த காட்சி மிகவும் அழகியதேயாம். உண்மையில் நம்பொற்பூங்கோதை—நல்ல நோன்பு நோற்றிருப்பின் அவரையே கணவனாகக் கொள்வாராக. அவர் நடந்த தோற்றம் எப்படி இருந்த தென்றால்—எனக்குச் சொல்லத் தெரியவில்லை—ஒப்பற்ற வடிவுடன் உருவில்லாத காமன் நேரே வருவதைப்போலவே தோன்றிற்று.

இன்பவல்லி :—(சிறு நகைப்புத் தோன்ற) தேவி! இறைமணிக்குப் பரிசு கொடுங்கள். அவள் தாழ்த்து வந்ததும் ஒரு நற்செயலை முன்னிட்டுத்தான்.

பொற்பூங்கோதை:—(சற்று வெட்கமுற்றவளாய்,) போதும் நிறுத்துங்கள்—எனக்குக் கணவனில்லையென்றுதான் கழுத்து வாடுகின்றதுபோலும். யார் எங்கு வந்தால்தான் என்ன ; எப்படி இருந்தால்தான் எனக்கென்ன? பொழுது போக்கிவிட்டுப் போக்கிலா மொழி புகல்கின்றாள்.

இறைமணி :—தேவி—மன்னித்தருள்க. உண்மையாக என் உளம் கருதியதையே தங்கள்பா லுரைத்தேன். என்சொல் பெரும்பாலும் பொய்க்காது. என் உளமும் என்றுமில்லா பேருவகையால் நிறைவு கொண்டு ததும்புகின்றது. தங்கட்கு விரைவில் கடிமணம் ஆகும். (எட்டி நோக்கி) தேவி! தேவி! அதோ பாருங்கள். ஆண் ஏறுபோல அங்கு அசைந்து, வருபவரே ஆய்மன்னர் ஆவர். அம்மே! அவரும் நாமிருக்கும் திசை நோக்கித்தான் வருகிறார்.

**பொற்பூங்கோதை.**—அப்படியா? எங்கே? (கோதை நோக்குதல். ஆய்தோற்றம்—கோதை நாணத்துடன் கடைக்கணித்துத் தோழியர் பின் மறைந்து, ஆய வெள்ளத்துடன் மறைதல்.)

**ஆய்வள்ளல்:**—(நெடிது நோக்கி) ஆ! இவர்கள் யாவர்? இவர்களது நடுவிலே சிலம்பொலி அதிர, மின்கொடிபோன்ற அந் நங்கை, பூங்கொடி, அணி நடை கற்பதெனை நகர்ந்து, தன் கூற்றம் போன்ற கண்களால் என் ஆவியாகிய உணர்வைப் பற்றிக் கொடு போகின்றனளே? ஏ முருக! அவள் என்ன இம்மலைப்புறம் வாழ்கின்ற அணங்கோ, அல்லது தெய்வ உலகத்தினின்றும், ஈண்டுப்போந்த விஞ்சை யர் மகளோ, ஒன்றும் அறியேனே? (சற்றுத் தலையை யசைத்து) விளங்கிற்று உண்மை. இம் மண்ணுலகத் திற்கு உரியவளாக அவள் இல்லாதிருப்பின் அவள் கண்கள் என்னைக் கண்டபோது இமைத்துப் புரளுமா? அன்னம்போல அடியிட்டுப் புடை பெயர்ந்த அடிகளும், அவள் உடுத்த ஆடையில் மாசு தோன்றியிருத்தலும் அமையுமா? நன்று! நன்று. அவள் காற்சிலம்பொலி என் காதினுக்கு இன்பம் பயந்ததால் நான் மணத்தற்கு உரிய பேதையே அவள் ஆவள். அவளை எவ்வாறு கொள்வது? (சுற்றிப் பார்த்தல்) ஆ! அஃது யார் (உற்றுநோக்கி) என் காவலனன்றோ அவன்? (அருகே சென்று வன்மை யுடன்) ஏடா! காவல! உறக்கமா? பேதை மகனே! எழுந்திருடா, (கைக்கோலால் தட்டுதல். காவலன் திடுக்கிட்டு நின்று ஆயைக் கண்டு நடுங்கல்) மடையா இவண் என் செய்தாய்?

**காவலன் :**—(வாய் குழற) அரசே, எளியேன் தங்களது நாய், அறியாமல் உறங்கிவிட்டேன். (வணங்குதல்)

**ஆய்வள்ளல் :**—சீ, பேதை! அறிந்த வாய்மையை, நல்லது. அதிருக்கட்டும். இதுவரையிலும் இங்கு பேசியிருந்துவிட்டு இப்பொழுது இங்கிருந்து சென்றவர்களை யாரென நீ அறிவாயா?

**காவலன் :**—பெரும! பொறுக்கவேண்டும். யான் யாதுமறியேன். நான் பிள்ளைகுட்டிக்காரன் என் குற்றத்திற்கு என்னை முதுகிலடியுங்கள்; வயிற்றிலடிக்கவேண்டாம். அரசே, எனக்கு உங்களைத் தவிர வேறு காப்பாற்றுபவர் யாருண்டு? பெரும! (கீழே விழுந்து வணங்குதல்)

**ஆய்வள்ளல்** —போடா! தப்பிலிப் பயலே! எழுந்திருடா (காவலன் எழுதல்) நீ இவ்வழியே விரைவிற் சென்று இங்கிருந்து செல்லும் நங்கையர்கள் எங்கு போகின்றார்கள் என்பதை அவர்கள் அறியாதவாறு அறிந்து விரைவில் வருவாய்.

**காவலன்** — அப்படியே, என் பெரும! தாங்கள் திருவாய் மொழிந்தபடி தங்களது ஆணையை எனது முடிக்கணிந்து இதோ விரைந்து சென்று திரும்புவேன். (வணங்கி ஓடுதல்)

**ஆய்வள்ளல் :**—(தனித்துநின்று) அன்பர் இடர்களையும் எம் அண்ணலின் அருளால் நான் அவளையே மணப்பேன். இதுகாறும் பிறமங்கையரை நினைந்தறியாத என் உள்ளம் இதுபோது அவளது துணையைப் பெற ஏங்குகின்றது. மேலும் எனக்கு என்று

யில்லாத ஓர் உணர்ச்சியும் தோன்றுகின்றது. எனது வலத் தோளும் கண்ணும் துடிக்கின்றனவே. இவை யாவும் எனக்கு அண்மையில் வருதற்குற்ற நன்மணத் தைத்தான் உணர்த்துகின்றன. அதோ, அவனும் வந்துவிட்டான். (காவலனது நுழைவு) ஏடா! யாவர் அவர்களென அறிந்தனையோ?

**காவலன்:**—(வணங்குகின்றான்) பெரும! உணர்ந்து வந்தேன். நமது வரைக்குத் தென்பாலுள்ள பொதிகை நாட்டின் வேளிர் தலைவனின் முதன்மகளே இங் கிருந்து விளங்கிய நங்கையருள் தலைமையுடையவ ராவர். மேலும் நாம் தங்கியுள்ள இப்பூங்காவில் அவர்கள் நாளும் மாலை நேரத்தில் பொழுது போக்கு வதன் பொருட்டு வருவார்களாம். இதுபோது அண்மையிலுள்ள ஒரு தினைப்புனத்தின் பக்கத்தில் வீற்றிருந்து நகையாடிக்கொண்டு இருக்கின்றார்கள்.

**ஆய்வள்ளல்:**—ஆ! அப்படியா! நான் அங்குச் சென்று என் உளத்தைக் கவர்ந்தவளைக் காணுவேன். நீ விரைவிற் சென்று எனக்காக நம்பணியாளர் காத் திருக்க வேண்டாமெனப் புகல்வாய். நான் விரைவில் நேரே ஊர் வந்துவிடுவேன்.

**காவலன்:**—பெரும! தங்களாணைப்படியே. (காவ லன் வணங்கி மறைதல். ஆய் ஆழ்ந்த சிந்தனையுடன் நிற்றல்.)

இயல் ௨ காட்சி ௧ முடிவு.

## இயல் உ. காட்சி - உ

**உறுப்பினர்:**—பொற்பூங்கோதை; இறைமணி; இன்பவல்லி; ஆய் அண்டிரன்.

**இடம்:**—பொதிகைவரைப் பூங்கா, **காலம்:**-மாலைப் போது

(காவலன்வழியே அவள் சென்ற இடமறிந்து சென்று, தன் காதலை அவளிடம் கூறுதல்)

**பொற்பூங்கோதை:**—ஏடி! தோழி! ஆய்மன்னரைக் கண்டது முதல் என் உள்ளத்தில் அவரது ஓவியம் போன்ற உருவமே உறைந்து நிற்கின்றது. முதன் முதலில் நம் இறைமணி அவரைப்பற்றிக் கூறிய போது யான் யாதும் முன்னர் அறியேனாதலால் என் மனம் விளையாட்டாகக் கருதிற்று. ஏடி, அவரைக் கண்ட அப்பொழுதே என் உள்ளத்தில் அன்பும் அச்சமும், நாணமும் வியப்பும் ஒன்று கூடின.

**இறைமணி:**—அம்மணி! யான் உணர்ந்தே கூறினேன். அவர் இங்கு வாராதிருந்தால் தங்களை எவ்வாறேனும் அவரைக் காணச்செய்ய வேண்டுமென்னும் அவா எனக்கு மிகுதியாயிருந்தது. தங்களது நல்வினைப் பயன்தான் அவரை இங்கு அழைத்து வந்தது.

**இன்பவல்லி:**—இறைமணி! நீ சென்று நந்தேவிக்கு வேண்டிய மலர்களைக் கொய்து வருக! யாங்கள் அது வரையில் இங்கு இருக்கின்றேம். (இறைமணி செல்லல்) அன்னாய்! நான் அவரைச் சில ஆண்டுகட்கு முன்னரே நேரில் கண்டதுண்டு. அப்பொழுதிருந்ததை விட இப்பொழுது அவர் மிகவும் வனப்புடையவராக வுள்ளார். மேலும் அவர், மிக்க பண்புற்ற நெஞ்சும், முதல்நாள் வந்த ஒருவனை மறுநாளும் வந்து, முன்னின்று வணங்கி, இல்லை என்று கேட்

டாலும், முன்னர் தாளை கொடுத்தனவற்றைச் சிறிதும் கருதாது அவன் உவக்கக் கொடுத்தருளும் வள்ளன்மையும, தன்னுயிர் போல மன்னுயிரைப் பேணும் திறனும், மங்கைப் பருவமுற்ற நங்கையர் களது வெள்ளை உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் தோள் வனப்பும் பெற்று, அறங்கிடந்த நெஞ்சும், அருளொழுக கண்ணும், திறங்கிடந்த திண்டோள் வலியும் பெற்று, முருகவே னென்ன மிளிர்கின்றார் என்பதை எவரும் அறிவர்.

பொற்பூங்கோதை:—இன்பவல்லி! இத்தனை நாள் இதுபற்றி ஒன்றும் தெரியாதவள்போ லிருந்தாயே. இன்றைக்கு நான் அவரைப் பார்த்ததிலிருந்து தானே நீ யாவும் நன்கு உணர்ந்தவளாகக் காணப்படுகின்றாய். இதுவரையில் எனக்கு ஒன்றுங் கூறாது எதற்காக நீ மறைத்து வைத்தாய்?

இன்பவல்லி:—தேவி! அவ்வாறு என்னைக் கருதற்க. தங்கள் உள்ளம் ஆய்வேள்பால் அடைக்கலம் ஆகும் என அறியாதிருந்ததால அடியேன் புகலவில்லை. என்னைப் பொறுத்தருள வேண்டும். உங்கட்கு முருகனரு ளால் அவரே மணமகனாவார். (சேய்மைக்கண் வெறித்து நோக்கி) 'ஆ' இஃதென்ன! அம்மன்னன் போல் இங்கும் காணப்படுகின்றதே! அம்மே, அவர் தான்! இங்குத்தான் வருகிறார். தாங்கள் இப்படி இருங் கள். நான் யாதும் அறியாதவள்போ லிருந்து என்ன செய்கின்றார் என்று பார்க்கிறேன். (தலைவியும், தோழி யும் ஒருபுறம் இருக்க ஆய் அவண் வருதல்.)

ஆய்:—என் உயிர் அனையாள் புகுந்த பொழில் இதுதான் போலும். (சற்று நோக்கி) ஆ! அங்கே இருவர் காணப்பெறுகின்றனரே! (உற்றுப் பார்த்து) என் ஆவியைக் கவர்ந்த தேவியும் அவள்தான். நன்று

நான் எவ்வாறு அவள்பாற் செல்லவியலும்? பெரியார், ஆண்டவன், அன்பர், குழந்தை, வயிறுவாய்த்த பெண்கள், மணத்திற்குற்ற நங்கை, இவர்களிடம் வெறுங்கையுடன் செல்லுதல் அமையுமா? இதுபோது அறிந்தேன்! அறிந்தேன்!! இம்மாலைப்பொழுதில் அவள் மனம் என்பால் ஒன்றி மனங்கொள்ள ஓர் இனிய நறுமணமிக்க மலர்ப்பூங்கொத்தை ஏற்ற கையுறையாகக்கொண்டு செல்லுவேன். (ஓர் அழகிய மணமிக்க பூங்கொத்தைக் கையிற்கொண்டு) ஏ! ஓரெழுத்தாலாய 'பூ' வே! உன்னைப்போல இந்நிலவுலகில் உயர்ந்தவர் யாவர்? நீயோ, உலகத் தோற்றத்தின் முதற்பொருளாகிய ஒளி வழியே பிறக்கின்றாய்! பகுத்தறிவும் பாங்குமில்லாப் பச்சிளங்குழந்தைகளும் உன்னை விரும்புகிறார்கள். நனிமிகத்தாழ்ந்த உயிர்களெனக் கருதப்படும் வண்டும், எறும்பும் நின்னை என்றும் கூடுகின்றனவெனில், ஆறறிவுபடைத்த மக்கள் நின்னை விரும்பி என்ன பாடுதான் படார்கள். நீ ஒளி வழியே பிறந்தாலும் ஒளிவழியே மறைகின்றாய். நின் வாழ்வு ஒரு பகற்பொழுது கூட இல்லையே? மிகச் சிறிய வாழ்க்கையை யுடைய நீ, ஆ! எத்தகைய சிறந்தவோர் பதவியை அடைகின்றாய். மக்களைப் புரக்கும் மன்னன் மாமுடியிலும், அவனையும் புரக்கும் ஆண்டவன் தலைமீதுமல்லவோ அமர்ந்து விடுகின்றாய். ஏ! மலரே மிக்க குறுகிய வாழ்நாட்களில் நீ பெறும் பேறும், புகழும் எவ்வளவு? நீ சென்று இதுபோது என் நங்கையின் குழலிற்சேர்ந்து எனது குறையைப் போக்குவிப்பாய் (அண்மையில் தோழி முன்வருதல்)

**இன்பவல்லி:**—ஐயா! தாங்கள் யார்? உரிமையற்ற இடத்திற்குத் தாங்கள் ஏன் வரவேண்டும்? இது

பெண்கள் உறைவிடமாகுமென அறியீரோ? இது பொதுவிட மன்று. நீங்களிருப்பது அறிந்தால், எங்கள் தலைவி என்னை வெகுள்வார்கள்; விரைவிற் செல்லுங்கள்.

**ஆய்:**—நங்காய்! நீ கூறுவன யாவும் எற்குப் புலனாகவில்லையே. உலகில் எவரேனு மொருவரது இல்லத்திற்கு, ஒரு விருந்தினர் வந்தால், அவர்களது முகம் சற்றும் கோணாதவாறு வரவேற்றுப் பணி செய்ய வேண்டுமெனுஞ் சீரிய கொள்கை நிறைந்த இத் தமிழகத்திலே, மேலும் தமிழின் பிறப்பிட மாகிய இப்பொதிகைவரையிலேயுள்ள மென்மைத் தன்மை வாய்ந்த ஒரு நங்கை, வந்த ஒருவனுக்கு, 'நில்லு, வராதே, வெளியே செல்லு.' என்பன போன்ற மொழிகளை நல்கினாள் என்றால் உலகம் பழிக்காதா?

**இன்பவல்லி:**—ஐயா! எனக்கு அதெல்லாம் தெரியாது. நாங்கள் சிறு பெண்கள். நீங்கள் தக்க பருவமுள்ள இளைஞர். எங்களோடு வீண் சொல்லாட வேண்டாம். உங்கள் அலுவலைப் பார்த்துக்கொண்டு நடவுங்கள்.

**ஆய்:**—பெண்ணே! நான் உன்னுடன் வீண் பேச்சு விளம்பவில்லையே? என் அலுவலைத்தான் பார்க்க வந்தேன். என் மீது சினங்கொள்ள வேண்டாம். என் அலுவல் முடிந்ததும் நான் நிற்க மாட்டேன்.

**இன்பவல்லி:**—ஐயா, தாங்கள் கூறுவன ஏதாவது இருப்பின் கூறுக. முதலில் நீங்கள் யாரெனக் கூற வேண்டும்.

**ஆய்:**—நன்று! நான் ஒரு ஆடவன்.

இன்பவல்லி:—முகத்தில் மீசை இருக்கும்போது அது விளங்கவில்லையா?

ஆய்:—கவிரமலையான் என்பது என் பெயராகும்.

இன்பவல்லி:—ஆய்குடிக் கவிரமலைதானே?

ஆய்:—ஆம், ஆம், நான் வேட்டைக்கு இன்று வந்தேன்.

இன்பவல்லி:—நல்லது.

ஆய்:—என் கண் முன் ஒரு அழகிய பெண் யானை நின்றது.

இன்பவல்லி.—அதைக்கண்டு அஞ்சினீர்களோ?

ஆய்:—இல்லை, இல்லை; அதைத தொடர்ந்து வந்தேன். அஃது எங்கேயோ மறைந்துவிட்டது.

இன்பவல்லி:—உயிருக்கு அஞ்சினால் ஓடாமல் என்ன செய்யும்.

ஆய்:—அஃது ஒருக்கால் இப்பக்கம் வந்ததோ என அறியவே அலைகின்றேன்.

இன்பவல்லி:—அறத்தின் அண்ணலே, தாங்கள் செல்லலாகும். இங்குத் தாங்கள் கூறியவாறு யானையும வரவில்லை; வேறு பூனையும் வரவில்லை.

ஆய்:—அது கிடக்கட்டும் ஓர் அழகிய இரு கோடுகளோடுற்ற கலைமான் வந்ததோ?

இன்பவல்லி:—ஓகோ! யானைபோய், மான் வந்து விட்டதே. ஐயா, இந்த இடத்திற்கு யானையும் வராது மானும் வராது. மக்கள்தான் வருவார்கள். நீங்கள் நகரலாம்.

ஆய்:—அப்படியானால் என் மனம் வந்திருக்குமே.

இன்பவல்லி:—உங்கள் மனம், உங்களை விட்டு எவ்வாறு வரும்? ஒருக்கால் தாங்கள் பித்தங் கொண்டவரோ? யானை என்றீர்; மான் என்றீர்; இப்

பொழுது மனம் என்கிறீர். நன்று நன்று நும்திறமை. முன்னுக்குப்பின் முரணாக இருக்கிறதே. கையிலிருக்கிற மலர்ச்செண்டை வைத்துக்கொண்டு யானையையும், மானையும் வேட்டையாடினீர்களோ?

**ஆய்:**—நங்காய்! பொறுத்துக்கொள். நான் பித்தன்தான். நான் இப்பூங்காவின் துவக்கத்திலுள்ள மலைச்சாரலை யணுகிய போது யானை போன்ற ஒல்கிய நடையும், மான் போன்ற மருண்ட கடையோடும் பார்வையுங் கொண்டு ஒரு பாவைநல்லாள் என் முன் தோன்றி, இந்நாள்வரையில் எவ்வளவோ முயன்றும் எவரும் அண்மையிலே வருதற்கே அஞ்சும் என் உள்ளத்தைக் கொள்ளைகொண்டு போயினாள். அக் கள்ளியைத் தேடியே இங்கு வந்தேன்.

**இன்பவல்லி:**—(சற்றுநாணி) நன்று, நன்று! நும் கூற்று. பித்து என்றால் பெரும்பித்தாக வல்லவோ இருக்கிறது. வெள்ளிய செல்லும் ஆடா; செல்லும் விரைவில். உமக்கு நீவிர் குறித்த அம்மணியை நெருங்குதற்குத் தகுதியுண்டா? பொதிகை நாயகனின் திருமகளெனத் தெரியீர் போலும்?

**ஆய்:**—தகுதி யிருப்பதால்தான் வந்தேன்.

**இன்பவல்லி:**—என்ன தகுதியோ?

**ஆய்:**—நான் மங்கையர்களை மணப்பதற்கேற்ற இளம் பருவத்தினன். அவளும் மணவினை கழியாதவள் என அவளது காற்சிலம்பு கூறுகிறது.

**இன்பவல்லி:**— இதுதானா?

**ஆய்:**—இன்னும் நான் முகன் தனது கைத்திறனை இவளிடத்தில் காட்டியுள்ளான்.

**இன்பவல்லி:**— அதிலென்ன தடை.

ஆய்:— அவளுக் கேற்ற உருநலம் வாய்ந்தவன், என்னினும் பிறன் கிடைப்பது அரிது.

இன்பவல்லி:— அஃது உங்கள் முடிவுபோலும்?

ஆய்:— மேலும், பொதிகைவேளின் மகளுக்கு அவளை யொத்த மரபினனான கவிரமலை நாடன் ஆய் அண்டிரனை விடத் தகுதி யுடையவன் எவனுவது உண்டோ?

இன்பவல்லி:—(வியப்புற்றவள் போல்) தாங்கள் ஆய்நாட்டு மன்னரோ? (வணங்குதல்) அறியாது கூறினேன். பொறுத் தருள்க. எங்கள் தலைவியைத் தாங்கள் மணங்கொள்வதற்கு ஏற்றவர்களே ஆகின்றீர்கள். எனினும் பெற்றோர்களை யணுகி மணம் பேசாது தனித்துள்ள அவளிடம் பேச முயலுவது தகுதியாகாதே.

ஆய்:— அறிவுடைத்தோழி, நீ கூறியது முறைதான். மணத்தற்குற்ற கோதையின் உளப்பாங்கை அறியவேண்டாமா? நாட்டமில்லாத பெண்ணை நயந்து மணப்பதால் நன்மை ஏற்படாதன்றோ? ஆதலாற்றான் யான் அவளைக் காண விழைகின்றேன்.

இன்பவல்லி:—பெருந்தலைவ! யான் கூறியதைப் பொறுத் தருள்க. எங்கள் தலைவி மிகவும் இளையவள், உலகியல் அறியாதவள்! மேலும் தங்களது உயர்ந்த குடிக்கும் பெருமைக்கும் எங்கள் தலைவி ஏற்புடையளாவாளோ?

ஆய்.—உங்கள் தலைவி உலகியலை நன்கு உணர்ந்தவளே. இளமைப் பருவந்தான் மணப்பதற்குற்ற கால எல்லையாகும். மேலும் பொதிகைவேளுடன் பெண்கொள்ள ஆய்வேளுக்கு உரிமையுண்டு. நீ காலம்போக்காது என் ஆவியைக் கவர்ந்த அணங்

கிடஞ் சென்று, இம்மலர்ப் பூங்கொத்தை அவளிடம் சேர்ப்பித்து என் வருகை யுணர்த்துவாய்.

இன்பவல்லி.—பெருமா! தாங்கள் ஒருபுறமிருங்கள் யான் வருகின்றேன். (தோழி செல்லல். ஆய் ஒருபுறமிருத்தல்) அன்னாய் தேவி! உங்களிடத்து ஆய் அளவு கடந்த அன்பு கொண்டுள்ளார். அவர் உங்களைக் காண நாடுகின்றார். அதற்கு அறிகுறியாக இப்பூங்கொத்தைக் கையுறையாக வழங்கியுள்ளார். (பூங்கொத்தைப் பூங்கோதை பெற்றுக் கண்களில் ஒற்றிக் கொண்டு முகர்தல். தோழி மறைய, ஆய் தோன்றல். (தேவி நாணிநிற்றல்)

ஆய்:—(அருகிற் சென்று) முத்த நகை மானே! நீ என்னைக் கண்டும் வாய்திறவாது தவஞ் செய்வாரைப்போல வாடியிருக்க, யான் செய்த தீவினைதான் என்னையோ? நங்காய், உனது அழகு மிக்க முகத்தைக் கண்டு அஞ்சியே, திங்களும் தன் முகத்தில் ஒரு மறுவைப் பெற்றனன் போலும். என்னே, இவளது வில்லைப் பழிக்கும் புருவமும், பிறையைப் பழிக்கும் திருநுதலும், மழையைப் போன்ற கூந்தலும் என் நெஞ்சை அலைக்கின்றனவே. தேனே! நினது பவளம் ஒத்த உதடும், முல்லையை மானும் பற்களும், எட்பூவை நிகர்க்கும் மூக்கும், காந்தள் போன்ற கைகளும் என்னை நின்பால் அடிமைப்படுத்துகின்றன. நாணின் பாவாய்! நான் கூறுவன மிகையாகும் என்று கருதுகின்றாய். அவை யாவும் உண்மையே! அறிவாய். நின் நடையைக் கண்டு, அதோ பார்த்தனையா, மான்களும், மயில்களும் பொறாமையுற்று எவ்வாறு பயிலவ தென அறியாமற் கலங்குகின்றன. (சற்றுத் திரும்பி நின்று) ஏ! நெஞ்சே, ஏன் கலங்குகின்றாய்; நின்

உயிர் அனையாள் உன்னோடு பேசாமையால் வாடுகின்றனையோ? உன்னிடம் அவள் மெய்யாகவே அன்பு வைத்திருக்கின்றாள். உன்னோடு என்ன பேசுவதென்றும் எவ்வாறு உன்னை அழைப்பதென்றும் கருதுகின்றாள். நீ தந்தருளிய பூங்கொத்தை அவள் சூடிக்கொண்டபோதே உன்னை ஏற்கின்றாள் என்பதை யறியாயோ? கவலற்க, அமைதியுறுவாய். (கோதை, கடைக்கணித்து நகைக்கின்றாள். தோழி வருகின்றாள்.)

**இன்பவல்லி:—** அண்ணலே! யாங்கள் சென்று வருகின்றோம். நேரங்கழிகின்றது (தோழி வணங்க, இருவரும் மறைதல்.)

**ஆய்:—**என் நெஞ்சைப் பற்றிய இக்கோதை நல்லாள் நாம் மணத்தற்குரியவளே. இவள் நாணம் மிகுதியும் கொண்டமையால் வாய்பேசாது வாளா இருந்தனளேனும், இவள் கண்கள், இவள் என்பாற்கொண்ட அன்பினை வெளியாக்கின. இனி, நான் காலம் நீட்டியாது இவள் தாய் தந்தையர், அனற் கடவுளின் சான்றாகக் கொடுக்க மணம் புரிவேன். முருகன் துணை நிற்க. (நகருதல்.)

இயல் உ காட்சி உ முடிவு.

## இயல் உ காட்சி ௩

உறுப்பினர்:—குரு—முனிவர்; பணியாளன்; அணிமுடியான்; தளியூரன்; வறிஞன்; பிணியாளன்.

இடம்;— ஆய்குடிப்புறத்துற்ற ஒரு பூங்கா.

காலம்:— வைகறைப்பொழுது.

[ஆய்வேள் மணத்திற்கு அவனது ஆசிரியர் செல்லுதல். குடிமக்கள் ஆயின் திருமணத்தைப்பற்றிப் புகழ்தல்.]

(கண்மூடி இருந்து)

1. கூவியழைக்கின்றேன்நான் நின்கோல
   மயிலின்மிசை நாளும் அருள்பெறவே-கூவி
2. தேவிவள்ளி தெய்வானை சேருன்புடை இலங்க
   தேடுமன்பருளத்தாடு முருகா உனைக்-கூவி
3. ஆதாரமற்றவர்க்கு அவனியில் உனையின்றி
   ஆன்றதுணையுமுண்டோ அறியேன்பெருவினை
   யேன்
   பேராதரிக்கின்ற பிள்ளைப்பெருமானே
   பேதையான் உன்னடிமை பேரருள் நீதரவே-கூவி

ஓம் முருகா! அருட்டிருவடிவேல்! நின் அருள் கிட்டுக. என் மாணவனாகிய இந்நாட்டு மன்னன் ஆய்வேளை சிறந்தவனாகின்றான். பெருமரபில் தோன்றி, பழமையாத நெறியில் நாளும் படர்ந்து, தன் கீழுள்ள மக்கள் கண் கலங்கச் சகியாது, கருணை வெள்ளம் பொங்கக் கண்களால் அருள் மழையைப் பெய்வித்து, விரும்புவார்க்கு வேண்டுவன வந்து, இம்மையிலும், மறுமையிலும், இந்நிலவுலகில் அவனினும் ஒன்று கொடையால் மேம்பட்டாருண்டோ? பெரும! அவன் நெடிது வாழ்வானாக. அவன் புகழ் ஓங்குக. அவன் நாடு தழைத்து நலம் பெருகுக. (கண்விழித்துத் திரும்புகின்றார்)

**காவலன்:—** (வணங்குதல்) பெருநோன்பு பலபுரியும் பெருமானே! எங்கள் தலைவனின் ஞானகுருவே! வணங்குகின்றேன். இத் திருமுகத்தைத் தங்கள்பால் கொடுத்துவருமாறு எம்மன்னர் என்னை யனுப்பியுள்ளார்.

(முனிவர் வாங்கிப் படித்தல்)

**முனிவர்:—** "ஐம்புலனடக்கிய ஆன்ற கேள்வியுள்ள ஆசிரியர் அவர்கட்கு, அடியேன் ஆய் அண்டிரன் திரு

படி தொழுது விண்ணப்பிக்கும் செய்தியாவது: அடிகளே! இன்று எனக்கும் பொதிகைவேள் மகள் பொற்பூங்கோதைக்கும், ஆனமாவர் புன்னிலையில் திருமணம் நிகழவிருப்பதால் தாங்கள் அதற்கு கூர்ந்து எனது குடிபிற்கு எழுந்தருளி என்மை வாழ்த்திருயள வேண்டு கின்றேன்" (தலையை அசைத்துக்கொண்டு) மகிழ்ந்தோட் மகிழ்ந்தோம் நம் மாறுக்கருக்கு இன்று பொதிகைவேள் மகள் பொற்பூங்கோதை மனைவியாகப் போகின்றாள். யாம் சென்று மணவிழாவைக் கண்டு களிப்போம். (காவலனை நோக்கி) காவல! நீ முன் செல்க. யாம் விரைவில் அங்கு இருப்போம். (காவலன் நீங்க, அடிகள் எழுந்து செல்லுதல்—சில குடிமக்கள் தலையில் மூட்டையுடன் கையில் விசிறிகொண்டு, பாடிநின்ற ஓர் அறிஞன் முன் தோன்றல்.)

அணிமுடியான்:— பஃஃவ். அடடா! என்ன உணவு, என்ன உண்டி, என்ன சாப்பாடு, என்ன அமுது, என்றைக்கும் இப்படியே கிடைக்கவேண்டும். ஆய் வேளின் அகம் இன்றுபோல என்றைக்கும் அடுக்கடுக்காய் விழாக்களால் மலியவேண்டும். பஃஃ ஒவ்.

துளியூரான்:— அண்ணே! அணிமுடியா! அக்கார அடிசிலுக்குப் பிறகு ஏதோ அமுது என்றார்களே; அஃதென்ன? மூச்சுவாங்குகிறதண்ணே! பேசக்கூட முடியவில்லை. எங்கேயாவது சாலைசதுக்கம் தென்பட்டால் சாயலாமென்று நினைக்கிறேன.

அணிமுடியான்:— தம்பி, துளியூரா! சாலை சதுக்கம் வருதற்குள் நம் நிலை......சாவு நிலை தான். பக்கத்திலே எங்கேயாவது மரத்துநிழல் இருந்தாற்போதும்; பார் விரைவில் சாயவேண்டும். என் வயிற்றைத் தூக்கிக் கொண்டு நடக்கவே முடியவில்லை. என் இடுப்பிலே

காசு முடிந்து செருகி இருந்தேன், அது சரியாயிருக்கிறதாவென்று பார். பலே ஓலைவ்!!!

**வறிஞன்:—** (உறங்கிக்கொண்டிருந்து) ஐயா! ஐயா!! (கையைத் தட்டுதல்) உங்களைத்தானே.

**தளியூரான்:—** யாரடா அது! (மெதுவாகத் திரும்புதல்) எதற்கய்யா அழைக்கிறாய்?

**வறிஞன்:—** ஏதோ, உணவு, உண்டி, சாப்பாடு, ஏதேதோ கூறினீர்கள்! நான் மிகவும் ஏழை. உண்டு இரண்டு நாளாயிற்று; அதற்குத்தான் கேட்டேன். எனக்கு ஏதாவது கிடைக்குமா? எங்கே போகிறீர்கள் என்று கேட்கத்தான் அழைத்தேன் (அணிமுடியான் மூட்டையுடன் திரும்பாது வானத்தைப் பார்த்து நகைத்தபோல் நகர, தளியன் கோணூன்றி நிற்றல்).

**தளியூரான்:—** ஏனப்பா! நீ ஒரு செய்தியும் அறியாதவன் போலிருக்கிறாயே. உலகச் செய்தியை அவ்வப்போது அறியாதவன் எதற்கு ஆவான். நீ இந்த நாடுதானே?

**வறிஞன்:—** ஐயா, நான் வடக்குத்திசையான். இந்த நாடு செழிப்புள்ளதென்றும், உலகமே வறண்டாலும் தன் வளத்தில் ஒருசிறிதும் குன்றாது என்றும், பெரிய முனிவர்கள்கூட வடக்குத் திசையிலிருந்து வயிறு வளர்க்க இங்கு வந்து, இதுபோது இதையே தங்களது உரிய நாடாகக் கொண்டார்கள் என்றும், இந்நாட்டிலுள்ளவர்கள் எவ்வளவு எளிய நிலையிலிருந்தாலும் வந்த விருந்தினரின் முகம் வாடுதற்கு ஒருசிறிதும் உளங்கொள்ளார்கள் என்றும் என்னென்னவோ வெல்லாம் கேள்வியுற்று வருகின்றேன். என் கண்முன் இதுவரையில் அவ்வாறு ஒன்றுங் காணப்படவில்லை. எனக்

குப் பசியோ கொடுமையாக இருக்கிறது. எங்கேயாவது உணவு கிடைக்குமிடம் சொன்னால் மிகவும் மகிழ்ச்சி கொள்வேன்.

**அணிமுடியான்:**— அடே! தளியா! போகிறவன், வருகிறவனோடெல்லாம் என்னடா பேச்சு? நேரே வாடா. உன்னால் நிற்கவே முடியாது. நான், அங்கே ஒரு மரம் தெரிகிறதே; அதன் நிழலிலிருக்கிறேன், வந்து சேர் அங்கே. உன்னோடு நிற்க என்னாலாகாது.

**தளியூரான்:**—அண்ணே! இவனைப் பார்த்தால் மிகவும் இரங்கத்தக்கபடியுள்ளது. நீ முன்னே போ; நான் வருகின்றேன். (அணிமுடியான்; சரி, சரி—அசைந்து ஊர்ந்து செல்லுதல்) அப்பா! வடக்குத் திசையான், நீ சொன்னபடியே இந்த நாடு வளமுடையதுதான்; வறிஞர்க்கு உதவுவதுதான்; விருந்தினரின் குழந்தை முகத்தைக் காண்பதற்குப் பொறுக்காததுதான். உன் முன் யாருமே இல்லை என்றாயே. அதன் காரணம், நாட்டுப்புறங்களிலுள்ள எல்லாரும், குழந்தை முதல் கிழவர் வரையிலும், அதோ ஒரு கோபுரம்...பக்கத்திலே ஒரு மாளிகை, இவையெல்லாந் தெரிகிறதே; அந்த இடத்திற்குப் போய்விட்டார்கள். அதனால்தான் உனக்கு இத்துன்பம் வந்தது.

**வறிஞன்:**— ஐயா! அப்படியா, அங்கு என்ன? திருவிழாவா, பெருநாளா?

**தளியூரான்:**— திருவிழாவும் பெருநாளும் ஒன்றாகக் கூடிக்கொண்டன. இந்த நாட்டுத் தலைவன் ஆய் அண்டிரன் என்பவனுக்கு இன்று திருமணமாகும். சேர சோழ பாண்டியர்களாய மூவேந்தர்கள் கூட வந்துளார்களென்றால் கூட்டத்திற்குச் சொல்ல வேண்டுமோ? எங்குப் பார்த்தாலும் மேளமும் தாள

முந்தான். வருவார் போவார் எல்லாரும் வயிறு நிறைய சாப்பிட வழியுண்டு: ஒவ்வொருவருக்கும் வயிற்றிற்கு உணவிடுவதோடு, இடுப்புக்கு இரண்டு உடைகளும், வழிச் செலவுக்கு ஆளுக்கு ஒரு பணமும் கொடுக்கின்றார்கள். நீ விரைந்து போவாய். நீ ஊரை அணுகுவதற்குள்ளாக எத்தனை பேர் உன்னைக் கூப்பிடுவார்கள் தெரியுமா? செல்க விரைவில்.

**வறிஞன்:—** ஐயா! உங்களுக்குப் பலகோடி வணக்கமாகும். ஏழையின்மீது அருள் வைத்து வழிகாட்டினீர்கள். தாங்கள் நீடூழி வாழ்க. (வறிஞன் ஆய்குடி நோக்கியதும், தளியான் திரும்ப ஒரு பிணியாளன் நிற்றல்.)

**பிணியாளன்:—** (நடுக்கங் கொண்டு) அடேடே தளியா! எங்கிருந்து வருகிறாய்? என்ன, விருந்து வநுதாறு.

**தளியூரான்:—** என் அண்ணா! தாங்கள் ஏன் மிகவும் இளைத்துப்போயிருக்கிறீர்கள். ஐயோ! என்ன இவ்வினை; கழுத்தெலும்பெல்லாம் தெரிகின்றனவே.. தங்களைக் கண்டு நெடுநாட்களாயின. தங்களுடம்புக்கு என்ன கெடுதி ஏற்பட்டது.

**பிணியாளன்:—** அதை ஏன் கேட்கிறாய்? எனக்குச் சென்ற ஆண்டிலிருந்து என் மகன் கடல் கடந்து சென்றவன் ஒரு செய்தியும் அனுப்பவில்லை. அந்த ஏக்கத்துடனேயே ஒரு நாள் நான் வெளியே மாலைப்போதில் உலாவிக்கொண்டிருந்தபொழுது, கல் இடறிக் கீழே விழுந்தேன். அதனால் என் மேலெல்லாம் படுகாயம்பட, பலநாள் துன்புற்றேன். பிறகு எனக்கு வயிற்றில் சிறிதளவு வலி தோன்றிற்று. அது மெதுவாய்ப் பெருகி, குடல் நோயாகி, உணவைக்

காணுதற்கும் இயலாதவாறு, ஒரு திங்கள் வரையி
லும் துன்புறுத்தியது. இதுபோது யாவும் சற்றுக்
குணமே. ஆனாலும் எலுமிச்சங்காயளவு கூட எனக்கு
உணவு செல்லவில்லை; என் செய்வது. இது கிடக்கட்
டும். நீ அரசனது மணவிழாவைக் காணும்பேறு பெற்
றுயே. அங்கு என்னவெல்லாம் நிகழ்ந்தன. கடப்
படாதவன் யான். நேரே கண்ட உன் வழியாவது
அறிந்து சற்று உள்ளங் களிக்கின்றேன்.

**தளியூரான்:**— அண்ணு! மன்னிக்கவேண்டும். என்
னுல நிற்க முடியவில்லை. இருந்தாலும் தங்களிடம் மறு
மொழி கூருது செல்ல மனம் வரவில்லை. சுருக்கமாகக்
கூறுகின்றேன். மணத்திற்குப் பலநாடுகளிலிருந்து
மன்னர்களும், பெருமக்களும் வந்திருந்தனர். பெருந்
தலைவணிகமாக்களும், பேராசிரியப் புலவர்களும்,
திருந்திழை அணி தேன்மொழியாளரும், தீஞ்சொல்
பயில் இளங்குழவிகளும், திக்கெங்கணும் பரவி
யிருந்த காட்சி, அம்ம! தேவருலகத்தினும் சிறந்திருந்
தது. எங்கப் பார்த்தாலும் மங்கல ஒலியும் மணப்
பறையோசையும் குடமுழா முழக்கும், கோல் முரசு
ஆர்ப்புமே மிகுந்தன. வாழிய, வாழ்க, வாழ்கவே
எனும் பெருமங்கல ஒலிப்பு வான்முகடு கிழிய
நிறைந்து விளங்கிற்று. மன்னர்—ஆய்வேள், தேவி
பொற்பூங்கோதையுடன் முகபடாமணிந்து முகிலெ
னக் கறுத்து, வரையென உயர்ந்து, தேரென அசை
யும், ஒரு கவிகைத் தவிசுடன்மிளிரும் களிற்றின் மீது
உலாப்போந்த கோலம் என்றுங் காணக் காட்சியே
யாகும்.

**பிணியாளன்:**— அப்படியா! ஐயோ! கண்ணிருந்தும்
குருடனேனே. எனது ஊழ்வினைதான் நம்மன்ன

ரின் மணவிழாவைக் காணுதவாறு தடுக்க, நோயாக எனக்குத் தோன்றி நின்றது. பிறகு ஏதாவது நிகழ்ந்ததோ?

**தனியூரான்:**—பிறகு உணவுச் சிறப்புத் தான். யான் எந்தப் பிறவியிலும் இத்தகைய உணவைப் பெற்றிருக்கமாட்டேன். உணவாவது உணவு. சோற்று வகையிலோ:—சர்க்கரை, புளி, மிளகு, எலுமிச்சம்பழம், தேங்காய், பால், தயிர், நெய் அடிசில் எனப் பலவகைகள். குழம்பு என்றால் அதிலும் எத்தனையோ பிரிவுகள். சாற்று வகைகள் பல. இனிப்பு மிக்க சிற்றுண்டிகளும், காரமிக்க பலகாரங்களும் எண்ணற்றில்லாதன. அப்ப வகைகள், உருண்டை வகைகள், முறுக்கு வகைகள், நீருணவுகள், எத்தனையோ வகைகளிருந்தன. அடடா, வெள்ளை வெளேரென்று முத்துக்குவியலைக் கொட்டினாற்போல அட்ட சோற்றினை அகன்ற இலையிலிட்டுப் பொன்னைச் சமைத்தாலன்ன உருக்கொண்டு விளங்கிய பருப்பை அதன்மீது இட்டு ஆவின் நறுமண நெய்யை அதன் மீது ஊற்றியபோது, பொன் முடியோடு விளங்கும் வெள்ளிப் பனிமலையினின்றும் உலகு நோக்கி ஊற்றெடுத்தோடும் கங்கையாற்றைப் போலத்தான் காணப்பட்டது. இவை யாவற்றையும்விட மிக்க அன்போடு உண்பவர் மனம் நிறைய வழங்கிய இன்சொல் இருக்கிறதே, அதுதான் யாவற்றினும் மேம்பட்டது.

**பிணியாளன்:**—என்னமோ, எனக்குக் கொடுத்து வைக்கவில்லை. இதற்கெல்லாம் நல்வினை புரியவேண்டாமா? ஏதோ நீ கூறியதைக் கேட்டாவது மன அமைதி பெறுகின்றேன். இருக்கட்டும், நான் உயி

ரோடு இருந்தால் நம் மன்னர் பெருந்தகை மகப்பேற்றின்போது நடத்தும் விருந்தின்போது ஒருகை பார்த்துக்கொள்ளுகிறான். என்றால் இனி நிற்க முடியவில்லை; என் இல்லம் சென்று வருகிறேன். சென்று வருகிறாயா?

**தளியூரான்:**—அண்ணே! வணக்கம். உடம்பைப் பார்த்துக் கொள்ளுங்கள். நான் சென்று வருகிறேன்.

**(இருவரும் பிரிதல்)**

இயல் உ —காட்சி ந முடிவு.

---

## இயல் ந—காட்சி க

இடம்:—பாணர் சேரி.

உறுப்பினர்:—பாணன்; விறலி; முடமோசியார்.

[அண்டிரனது கொடையால் வாழும் பாணர் சேரிக்கு, புலவர் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் சென்று, ஆயைக் காண விழைந்த விறலியை அழைத்து வருதல்].

குமரியொடு வேங்கடமுங் குடகுகொல்லி கவிரம்
கொடுங்குன்றம் பொதிகைவரை கொண்டதமிழ் நாடு
கரைவழிய நீர்சுரக்குங் காவிரிபா லாறு
கலிப்பொருநை வைகைபெண்ணை கொண்டதமிழ் நாடு
நறியமண ஆர்ஆகிலும் நற்களிற்றுக் கொம்பும்
நற்பவழ மணிபொன்னும் நடிக்குமயி லோடும்
கருமுகில்சூழ் குறுமுனிதன் பொதியமலை மீது
கமகமென மணநிறைதென் காலசைந்தே ஆடும்

**பெரும் பாணன்:**—எனக்கினிய விறலி! நமது முருகவேள், நம் குலப்புரவலன், வள்ளற் பெருந்தகை—

ஆய் மன்னனுக்குப் பெருவாழ்வு தருவானாக. நம் 'ஆய்' இத் தென்பாண்டி நாட்டிடைத் தோன்றிய உயரிய வீரமும், தண்ணளியுமிக்க வேளிர் குலம் விளக்கவந்த ஓர் ஆண்டகையே யாவான். எத்தனையோ குறுநிலப் புரப்பாளரும் முடியுடை வேந்தரும் நிறைந்துள்ள இத்தமிழ் நாட்டில், இதுபோதுள்ள மக்களாய ஆடவர் பெண்டிர், இவர்களது இனிய உள்ளத்தில், கவிரமலை நாடாளும் ஆய் அண்டிரனது பெருமையல்லாது பிறிதொன்று நிலைக்க இயலுமா? செல்வமும் நிலமும் படையும் பெருக்கமுற்ற சேர, சோழ, பாண்டியரும் எம் ஆய் வேளின் பெரும்புகழுக்குத் தாழ்கின்றனரெனில் பிற மன்னர் எங்ஙனம் ஆய்முன் புகழ்தேட இயலும்?

விறலி:—இனிய யாழை, குழலினும் மென்மை மிகுமாறு ஒலியெழுப்புந் திருக்கை பெற்ற எங்கணவ! நம் பெருமான் ஆய்வள்ளலன்றி, பிறிதொருவரது பெயர், கொடைக்குச் சிறப்பாக இந்நாளில இருப்பதாக இதுகாறும் எவரும் கூறியதில்லை. நம் வள்ளல் அண்டிரனார் பிறந்த நாள் தொட்டு இக்கவிர மலையோடு கூடிய ஆய்நாடும் புகழால் உயர்ந்தது; கவிர மலையும், இல்லையென்று எண்ணும் இரவலர் உள்ளத்தில் இன்ப எல்லையாகக் கவின் பெற விளங்குகின்றது.

பாணன்:—இனிய நங்காய்! நம் வள்ளல் ஆய், நம் போன்ற இரவலர், புலவர், பாணர், கூத்தர் முதலாய யாவர்க்கும் ஊர்ப் பொதுவில் இனிய பழங்களுடன் மிளிரும் ஒரு தேமா மரத்தைப்போல, அவர்கள் மனம் நிறைவு பெற பரிசில் வழங்கிப் புகழ் பரப்புவதோடமையாது, மாற்றலராய மன்னர்கள், 'ஆய்' எனுஞ் சொல் செவி சாருமுன 'ஆ' வென அலறி

அஞ்சுமாறு தோள் வன்மையும் பெற்றிருப்பதால் இவனைத் தீயவரை யொழித்து, நல்லவரைப் புரக்கும் திருமால் எனினும் பொருந்தும். இவன்தன் அரண் மனைவாயில் இரவலர்க்கும் பிறர்க்கும் என்றும் அடை படாதிருப்பினும், பகைஞராவார் நெருங்குதற்கும் இயலாதது ஆகும். இவனது பெருமையும் புகழும் விரிப்பிற் பெருகும்.

விறலி:—எம் தலைவ! தாங்கள் யாண்டுதோறும் ஆய்குடிச் சென்று பெருமான் ஆய்வள்ளலைக் கண்டு தங்களது இசை நலத்தால் அவனை மகிழ்வித்து, எனக்கு வேண்டிய அணிகலன்களும், ஆடையும் கொணர்வதோடு, யானும் நம் சுற்றமும் கூடி மகிழ்ந்து பல்லாண்டளவும் இன்புற்று வாழ்வதற் குரிய பொருள் வசதியும் பெற்று வருகின்றீர்கள். மேலும் அவரது கண்கவர் வனப்பையும், கொடைத் திறனையும், தோள் வன்மையையும் பிறவற்றையுந் தொகுத்து, யாங்கள் யாவரும் 'எப்பொழுது அவரது தோற்றத்தைக் காணலாகும்' என்று ஏக்குற்றிருக்கு மாறு எடுத்தியம்புகிறீர்கள்; நாத! என்னை அவர்களது திருமுகப் பொலிவைக் கண்டு, களிக்குமாறு ஆய் குடிக்கு அழைத்துச் செல்லலாகாதா ?

பாணன்:— எனதன்புமிக்க விறலி! நீ கூறுவன யாவும் கருதற் குரியனவே. ஆய்வள்ளல் சில நாள் ஆய் குடியிலும் சிலநாள் கவிரமலை முடியிலும் உறைகின் றாராகலின், யான் அவரை நாடிச் செல்லும்போது, கவிரமலைமீது அவரிருப்பின், உன்னை ஆண்டு அழைத் துச்செல்லல் அரிதாகும் என்பதனாற்றான், ஆடலில் திறம்பெற்றிருந்த உன்னை என்னுடன் துணைவருவ தற்கு விரும்பவில்லை. எனினும் இனி யான் அவரைக்

காணச்செல்லும்போது உன்னை மறவேன். (உற்றுப் பார்த்து) அதோ வருவது யார்? நம்மை நோக்கி யன்றோ வருகின்றார்போல் காணப்படுகின்றது.

**விறலி:**— என் நாயக! என்ன தங்கட்குத் தெரி யாதா? சென்ற ஆண்டில் சின்னாள் நம்முடன் வதிந்து மகிழ்ந்த புலவர் பெருமான்தான் வருகின்றார். நம் மன்னர்க்கு அவர் மிகவும் நெருங்கிய துணைவராவார், என்றுகூடத் தாங்கள் என்னிடம் கூறினீர்களே.

**பாணன்:**— ஓகோ! உறையூர் ஏணிச்சேரி முட மோசியார் அன்றோ அவர். இதுபோது சற்று நிற மாறுபாடாகவுள்ளதால் நன்றாக உடனே அறிதற் கில்லை. (புலவர் வருதல், பாணன் விறலி இருவரும் வணங்குதல்) வருக! புலவர்பெரும வருக! தாங்கள் இவண் எழுந்தருள எங்களது இச் சிறுகுடில் செய்த தவப்பேறு தான் என்னையோ?

**முடமோசியார்:**— வாழ்க பாண! நின் விறலியோடு இனிதே வாழ்க! (இருத்தல்) நீயும் நின் சுற்றமும் நலந்தானே?

**பாணன்:**— தங்கள்போன்ற ஆன்றோர்கள் நாளும் எமது மன்னனுடன் இருந்து மன்னுயிர் ஓம்பி உலகம் புரக்கும்போது எம்போன்றவர்களுக்கெல்லாம் என் றாவது குறையொன்றிருக்க இயலுமா? மேலும் "நெல்லும் உயிரன்று, நீரும் உயிரன்ற; மன்ன னுயிர்த்தே மலர்தலை உலகம்" எனும் பொய்யா மொழிக்கு இலக்கணமாக எமது ஆய்வள்ளல் இந் நாட்டைக் காத்து வருகையில் அவரது அடியினைக் கழுவி வாழும் எமக்கு எக்குறைதான் நெருங்கி வரு வதற்கு இயலும்?

**விறலி:—** எமது நாட்டிற்குற்ற புலவர் திலகமே! அடியேன் வணங்குகின்றேன். எங்களது சுற்றமும் யாமும் எல்லா நலனும் பெற்று வாழ்கின்றோம். எனது அணிகலனும் ஆடையும் உண்ணும் உணவும் ஆய்க்கே உரியன. ஆண்டுதோறும் எங்களது குடி தழைக்கப் பலவகைத்தாய உதவிகளையெல்லாம் யாங்கள் விரும்பியவாறு கொடுத்தருளும் எம் ஆய் மன்னனை, உள்ளம் வழிய, முகம் மலரத் தோன்றும் பெருங்களிப்பினால் வாழ்த்துகின்றோம். ஆயினும் யான் மட்டும் இத்தகைய பெருமகிழ்வுக்கு ஏதுவாகிய நம்மன்னனை, பிறர் கூறிய அளவில் மனத்தால் பார்த்து மகிழ்கின்றேனேயன்றி எனது ஊனக் கண்களாற் பார்க்கும் பேற்றினை இதுகாறும் பெற்றிலேன்! அப் பெருமான் தன் வாழ்வினைப் புனைந்து பாடாத நா என்ன நாவே; அவ்வள்ளலின் புகழினைக் கேளாத செவி என்ன செவி? அக்கோமானின் திருமேனிப் பொலிவைக் கண்டு களிக்காத கண் என்ன கண்ணே? நாயினுங் கடைப்பட்டாளாகிய யான் அவரது மேனியினழகைக் கண் குளிரக் கண்டு, மகிழவெய்துதற்குத் தாங்கள் அருள் புரிய வேண்டுகின்றேன். எனக்கு எந்தப் பரிசிலும் வேண்டுவதில்லை. பொன்னும் வேண்டாம்; பொருளும் வேண்டாம்; ஆய் நாட்டுக் கோமான்றன் அழகிய உரு நலனைக் கண்டு மகிழும் பேறுமட்டும் கிட்டினாலே, யான் இப்பிறவிப் பயனைப் பெற்றவளாவேன். எளியார்க் கிரங்கும் பெரும! தாங்கள் சிறியேனது புல்லுரையை ஏற்றருள வேண்டும்.

**பாணன்.—** புலவர் பெரும! எனது இவ்வில்லக் கிழத்தி, தாங்கள் இவண் வருமுன்னர் ஆய் வள்ளலைக்

காண வேண்டுமெனும் அவாவினை மிகுதியும் பெற்றிருப்பதாகக் கூறினள். இதுபோது அவளது நல்வினைக் கேற்பத் தங்களது வருகையும் வாய்த்தது. எளியாளின் வேண்டுகோட்குத் தேவரீர் உளம்பற்றியருள இறைஞ்சுகின்றேன்.

முடமோசியார்:—நல்லது பாண! நீ விளம்பியவாறே நின் இல்லகிழத்தியின் அவாவினை நிறைவேற்றுவேன். (விறலியை நோக்கி) ஏ! விறலி, நமது மன்னர் பெருந்தலைக் கவிரவரை நாடன் உலகிலுள்ள மற்றைய மன்னரைப் போல்பவனல்லன். கொடை என்று சொன்னால் அதற்குற்ற தெய்வம் அவனே யாவான். வீரம் என்றால அதற்குரிய கடவுள் அவன்தான் ஆகும். அறத் தொழிலும், மறத்தொழிலும், ஒருங்கே யமைந்த மன்னனை, இதுபோது அவனையன்றி அவனியிற் காண்பதரிது. ஆதலால் உலகத்தில் யாவரினும் முதலாவதாக நினைப்பதற்குரியவன் அவனே யாவன். அவனையன்றிப் பிறரைப்பாடும் நாவும், கூரிய வாட்காவிடாத பிளக்கப்படுவதாகும் அவன் புகழ் அல்லாது மற்றவரது நலனை விரும்பும் காதுகள் பாழடைந்த ஊரிலிருக்கும் கிணறு போலத் தானே தூர்ந்து போவதாகுக. மேலும் இனிய பசிய புற்களை யுண்டு வாழும் கவரிமான் தனது பிணையுடனே குவளை மலர் மிக்க சுனைகளின் நீரை யருந்தி, தகரமரங்களின் குளிர்ந்த நிழலிலே தங்குதலைப்பெற்ற, வனப்பு மிக்க, இமயமலை, வடக்குத்திசையிலிருந்து தேவருலகத்தைக் காப்பது போல் தென் திசையில் கவிரமலைநாட்டோடு கூடிய ஆய்குடி இல்லாதொழியின் இப்பரந்த மண்ணுலகம் காக்கப்பெறாது கீழ்மேலாகிவிடும். எனவே நலங்கொள் நங்காய்! நீ விரும்பியது பிழைபாடுடைய

தன்று. யான் இன்று பகல், ஆய் வள்ளலைக் காணுதற்குக் கூடும். உன்னையும் உடன்கொண்டு சென்று அம்மன்னனது அருள் நோக்கிற்கு, உன்னை உரியவனாக்குகின்றேன்.

**பாணன்:**—பெரும! தாங்கள் செய்தற்குற்ற இப்பேருதவி எம்மால் என்றும் மறக்கற்பாலதன்று. (விறலியை நோக்கி) ஏ! விறலி! நீ நல்ல நறுமண மிக்க மலர்களினால் நின் கூந்தலை அழகுபெறச் செய்து நின் திருநுதல் திலகத்துடன் விளங்க நின் அணிகளையணிந்து, நம்புலவர் பெருமானின் துணைகொண்டு ஆய்குடி நாட்டைனக் கண்ணாரக்கண்டு, களிப்பாயாக.

**விறலி:**—கல்விக்கடலே! எளியேனிடம் கருணைகொண்டமைக்குத் தங்களது திருவடித் தாமரைகளை எனது உளத்திற்கொண்டு பூசிப்பதன்றி, எம்போன்றோர் தங்கட்குச் செய்தற்குற்ற வேறு கைமாறுமுண்டோ? யான் தங்கட்குத் தந்த தொந்தரவுக்கு மன்னித்தருளுமாறு வணங்கி வேண்டுகின்றேன் (வணங்குதல்).

**முடமோசியார்:**—நன்று! விறலி! புறப்படுக விரைவில்; இன்று மாலைக்குள் ஆய்குடிக்குச் செல்ல வேண்டும். மன்னர் எங்குளாரோ அறியேன்? ஒருக்கால் மலை மீதிருப்பின் நாளைத்தான் செல்லவியலும்.

**விறலி:**—புலவரேறே! யான் ஆயத்தமாயுளேன், தாங்கள் புறப்படலாகும்.

(விறலியும் புலவரும் புறப்படுதல்-பாணன் புலவரை வணங்குதல்)

இயல் ௩—காட்சி ௫ முடிவு.

---

## இயல் ௩.—காட்சி ௨.

உறுப்பினர்:-குட்டுவன் கீரனார்; மருதநாகன்; துறையூர் ஓடைகிழார்; முடமோசியார்; விறலி; காவலன்; நற்குடி வேள்; படைத்தலைவன்; ஆய் அண்டிரன்.

(ஆய்வள்ளல் தன்பாற் போந்த புலவருக்கும் இரவலருக்கும் பரிசு வழங்கல்)

**குட்டுவன்கீரனார்:—** அருண்மிக்க ஆயே! நினது கொடை இவ்வுலகம் சுருங்குமாறு யாண்டும் பரவியுளது. பெரும! ஒரு புறம் தாழ்ந்த இறவானத் தோடுள்ளன பல சிறிய குடிசைகள். ஆங்குள்ள குறமக்கள் தங்கள் இல்லத்தில வளைந்த மூங்கிற் குழாயில் சேமித்துவைக்கப்பெற்ற முதிர்ந்த மதுவை விரும்பி யுண்ணுகின்றனர்; மற்றொருபால் வேங்கை மரத்தோடு கூடிய முற்றத்தில் களிப்பு மிகுதியால் குரவைக் கூத்தாடி அயர்கின்றனர். இவையாவும் நிகழும், இனிய பலாப்பழங்கள் மிக்க மரங்களோடு கூடிய பெரிய மலையை யுடையவனாய நீ, கொல்லும் போரைச் செய்கின்ற தலைவனுவாய். நினது, உயர்ந்த முடியோடு கூடிய முகிலினந் தங்கும் மலையை யானைகட்குப் பிறப்பிடமான அழகுமிக்க காடுகள் பாடி அதனால் உயர்ந்தனவோ? சுரபுன்னை மலராகிய தலைமாலையையும் கூரிய வாளையு முடைய எம்தலைவ! நின்னால் இரப்போர்க்குக் கொடுக்கப்பட்ட ஆனைகளின் தொகை மேகமறைப்பில்லா வானத்தில் மீன்கள் பூக்குமாயின் அவற்றின் எண்ணிக்கை எவ்வளவாகுமோ அவற்றிற் சிறிதுங் குறையாதது என்பதில் ஐயமில்லை. நின்கொடைத் திறன் என்றும் நிலைபெறுக.

**மருதநாகன்:—** நல்ல மணிகளாலும் உயரிய பொன்னாலும் அமைக்கப்பெற்ற அழகிய வளைந்த மணி

மாலையை யணிந்த ஆய்குடித்தலைவ! நினது யானைக் கொடையை நோக்கின், உனக்குரிய காடுகளிலுள்ள பெண்யானைகள் ஒரு கருப்பத்தில் பத்து யானைகளைப் பெறுமோ என ஐயம் விளைகின்றது. நின்னையும் நின் மலையையும்பாடிவரும் பரிசிலர்க்கு உனது இனிய முகத்தை ஒளியாது வெளிப்படுத்தி மிக்க அன்போடு அவர்கட்கு நின்னால் கொடுக்கப்பட்ட யானைகளை எண்ணினால், அவை நீ முன்னர் கொங்கர் நாட்டுப் படையை மேறகுக் கடல் வழியே துரத்தியடித்த போது அவர்களை வெல்வதற்கு விட்ட அம்புகளினும் பலவாகும்

குட்டுவன் கீரனார்:— களிறு நிறைந்த கவிரவரை நாயக! இம்மையிற் செய்தனயாவும் மறுமைக்குதவும் எனும் கருத்துடனே, பொருளை விலையாகக் கொடுத்து வணிகர் போல அறங்கொள்பவனல்ல நீ. அறவிலை வணிகனலொத நீ ஆன்றோர் சென்ற நெறியென உலகத்தார் கருத அந்த நெறிசெயலில் முயல்வதுமில்லை. நினது கைகள் இயற்கையாகவே வள்ளன்மை பூண்டுள்ளன. பெருப! நின்பால் பரிசில் பெற்றுத் திரும்பும் பாணர்கள் தங்களது மத்தளத்தை ஊரின் பொதுவிடத்திலுள்ள பலாமரத்தின் கிளைகளில் வைத்து அதன் கீழிருந்தபோது அம்மரத்திலுள்ள சில மந்திகள் தெளிந்த இனிய ஓசையை எழுப்பும் மத்தளத்தினது கண்ணைப் பலாப்பழமெனத் தட்ட, அம்மரத்தின் மறுபுறத்தில் வாழும் அன்னசேவல் அவ்வோசைக்கு மாறாக எதிரொலிசெய்யும் சிறப்புடனமைந்த நினது பொதியமலை, ஆடுதற்கு வருகின்ற விறலிகள் அணுகுதற்குற்றதே யொழிய மாற்றரசர்கள் அணுக வொண்ணு வன்மை மிக்கது.

**ஆய்:—** புலவர் பெருமக்களே! இத்தகைய பேறுகள் வாய்ப்பதற்குத் தங்கள்போன்ற துணைவரின்றி அமையுமா? உயர்ந்த குடிப்பிறப்பும், பரந்த நிலப்பரப்பும், மிக்க பணியாளர் சூழ்வும் அமையினும், உலக மூவப்ப, ஆன்றோர் மொழியறிந்து அதன் நெறியில் நில்லாதவனுக்கு இவ்வுலகம் மணநல மறியா மக்களற்ற ஒருகாட்டில் மல்லிகை மலர்ந்ததையொப்பவே யாகு மன்றோ. இத்தகைய என் மேம்பாட்டிற்கு உற்ற துணையாக அமைந்த உங்களது தொடர்பு எனக்கு என்ஞான்றும் அமையுமாறு எம் முருகவேள் துணை செய்வாகை.

**காவலன்:—** (வணக்கத்துடன்) எம் துரையே! அடியேன் வணங்குகின்றேன். நமது தலைவாயிலில் சோணாட்டுத் துறையூரினின்றும் ஓடைகிழார் எனும் புலவர் தமது வருகையை யுணர்த்தித் தங்களைக் காண விழைகின்றார்.

**ஆய்:—**காவல! காலந்தாழ்த்தாது உடனே இவண் விடுக. (காவலன் மறைதல்—புலவர் தோன்றல்.)

**ஆய்:—** (வணங்கி) வருக! எம்புலவ! வருக! வருக! தங்களது வருகை நல்வரவாயமைக! இவண் அமருங்கள்.

**துறையூர் ஓடைகிழார்:—** (வணங்கி) வீரக்கழலும் வெற்றிவேலும் கொண்ட தலைவ! நீ நலமுற்று வாழ்க! யான் மன அழுக்காறற்ற ஓர் இயற்றமிழ்ப் புலவன், எனது ஊர் கொல்லிமலை நாட்டின் அருகாமையி லுள்ள தண் பனிநீர் நிறைந்த வாய்க்காலோடு கூடிய துறையூராகும். கால மழையின்மையால் நாடு வறண்டு கருப்பு மிகுந்தது. பிடி திமிர்ந்த பொன்னை ஒருபடி நிறையும் தவிட்டுக்கு விலை பேசுவாராக எம்

நாட்டவர் மாறின் என் போன்றாரின் எளிமையைத் தாங்கள் எளிதில் அறியலாகுப. பெருக! யான் யாழ்ப் பத்தரின் பின்புறம்போல, நூலிழை மிக்க தையல் களால் நிறைந்த உடையினில் ஒன்றோடொன்று தொடர்ந்து பற்றிக்கொண்டு கிடக்கும், ஈரொடு மிக்க பேனின் பகைக்கு அஞ்சுவதோ, வண்மையினால் எலும்பு புறந்தோன்ற உடல்வறறி, தெளிந்த நீரினால் கண்நிறையப் பெற்று உடம்பு வியாத்துநிற்கும் எனது சுற்றத்தாரோடு, பசிநோய் வருத்தும் கொடுமையை ஒருபகை எனப்பேறு' எனது உணவுக்கு வருந்தும் நிலையையும் உணராது 'நின் கையிலுள்ள பொருளைத்தா' என்று கூறி என் நிலை தளருமாறு, மரங்கள் மிகுந்த குளிர்நத மலையிலுள்ள குரங்குகள்போல வழி மறித்து, பறித்துச் செல்லும் கள்வர்களது அலைப்பை ஒரு பகை எனக் கொள்வனே. எனது எல்லாப்பகை களையும் ஆய் ஒருவனே அறியவல்லுநன் எனக் கருதி எனது சொல்லால் நினது பெயரை வாழ்த்தி, நின் புகழை விரும்பி, வெய்யிலால் மிகுதியும் காயப்பெற்ற பாலை நிலத்தின் வெப்பத்தையும் பாராட்டாது, இங்கு வரலாயினேன். இங்ஙனம் வறுமைப் பிணியால் வாடிய எப்போன்றார்க்குத் தரும் கொடையே பயன் கருதாது அளிக்கப்பெற்ற பேரறமாகும்; அவ்வா றன்றிப் பிறர் பெறின், பயன் கருதிக் கொடுத்ததுவே யாகும்; அதனோடு அது தனக்குத் தந்ததாகவே யமை யும். ஆதலால், எளியார் துயரம் களையும் எந்தாய்! நீ ஆராய்ந்து பொருந்தியவாறு எற்குப் பரிசில் தந் தருள்வாய. யான் நீ தந்த செல்வத்தைக் கொண்டு நாடோறும் மிக்க மகிழ்ச்சியுடனிருந்து எம் துறை யூரின் தண் துறை முன்னர் 'குவிக்கப் பெற்றுள்ள

நுண்ணிய பல மணலினும் பலநாள் வாழ்க, வென நினை வாழ்த்தி' உண்டு மகிழ்வேன்.

**ஆய்:**—துறையூரினின்றும் எம்மை யுள்ளி இவண் போந்த பெரியீர்! உங்கட்குற்ற வறுமை, என்முன் நீரின் முன் அவியும் நெருப்புப்போல ஒழிக. யான் தங்கட்குக் கொடுக்கும் பொருளை மனமகிழப் பெற்று, நும்மூர் சென்று, சுற்றம் புரந்து, நலமுடன் வாழ்க, (காவலனை நோக்கி) ஏடா காவல! நீ இப்புலவர் பெருமானை அழைத்துச் சென்று, நீராடச் செய்து கொட்டைக்கரையுடைப் பட்டுடையை உடுத்தி, அறுசுவையுடன் அடிசில் உண்பித்து, நமது நிதிச் சாலையினின்றும் இவர்க்குரிய பொற்கிழியை யளித்து இவண் அழைத்து வந்து, வழியனுப்புக.

**காவலன்:**— தங்கள் திருவருட்படியே (வணங்குதல்.)

**துறையூர் ஓடைகிழார்:**— களைக ணில்லாதவர்க்குக் கொழுகொம்பா யமைந்த காவல! நின் அருள்நோக்கால் வறுமை எனும் கொடியன் என்னை விட்டு வாய்விட்டலறி ஓடுகின்றான், பெரும! நீயும் நின் சுற்றமும் உலகமுளளளவும் புகழ் மணம் பரவுமாறு வாழ்வீர்களாக! (வணங்கல்-ஆய் எழுந்து கைகூப்புதல்-புலவர் மறைதல்.)

**ஆய்:**— (புலவர் முடமோசியார் விறலியுடன் வரும்பொழுது எழுந்து நின்று) வருக! எம்புலவர் திலக! வருக! வருக!!

**முடமோசியார்:**— வாழ்க. எம்மன்ன! வாழ்க! (சென்று இருக்கையிலமர்தல்) பெரும! யான் இவண் வந்தபோது எம்முடன் வந்த இவ்விறலி நம் நாட்டின் ஒரு பகுதியினளேயாகும். யான் இவளது பாணர்.

சேரிக்குச் சென்றபோது நின்னைக்காண அவாவினள். அதுபோது, அவளிடம் யான், "மெல்லிய இயல்பினை யுடைய விறலி! ஆயின் நல்ல புகழைச் செவியால் கேட்டலன்றி அவனது வடிவத்தை நேரிற் கண்டறி யாய்; காண விரும்புவாயாயின், அழகிய உனது நறு மணமலர் நிறைந்த கூந்தலை மலையிடத்துத் தோன்றும் காற்றசைப்ப, தோகையுடைய மயில்போலக் காட்சி யுண்டாக நடந்து, மழைபோன்ற வண்மை யுடைய தேரினையுடைய ஆய்வள்ளலை என் பின் வந்து காண் பாயாக!" எனக் கூறினேன். அதனால் அவளும் இவண் வந்தாள்.

**ஆய்:**—விரைந்து எனைக் காண வந்தவ, விறலி! நீ நலம்பெற்று வாழ்வாயாக. நீ யாது கருதி எம்புலவர் பெருமானுடன் இவண் வந்தாய்? கூறின் வேண்டுவன இயன்ற வரையிற் புரிவேன்.

**விறலி:**— எவரும் புகழுமாறு பகைஞரது மிக்க மாறுபாட்டை வெற்றிகொண்ட வலிமை மிக்க ஆய் நாட்டு அண்ணலே! அடியேனின் பல்கோடி வணக்கம் தங்கள் பரந்த அடிகளிற் பொலிவதாகுக! பெரும! புலிகள் மிக்க, முடிகளோடுயர்ந்த இம்மலையின் மீது, மிக்க துன்பத்துடன், உடல் வளைய, கால் நோவ, கைவளையல்கள் கலீரென வாய்விட்டொலிக்க, அசைந் தசைந்து, பொற்கம்பிகளால் கட்டப் பெற்றன போன்ற நரம்புகளால் இணைக்கப்பெற்ற, பாலைப்பண் ணைப் பயன்தெரிந்து பயிற்றும் சிறியயாழை இடை யிற்றூங்கிக்கொண்டு, புகழ்கற்கமைந்த தலைமை யையுடைய நினது புகழைப்பாடி, ஏறுதற்கரிய பல மலைப் பிளவுகளையுங் கடந்து இங்கு யான் வந்தமை: எந்நாளும் அவையில் வரும் பரிசிலர்

கட்கு யானைகளை அணியணியாகச் சாய்த்துக் கொடுக்கும் மாவேளாகிய ஆய் மன்ன! யானையை வேண்டியுமன்று, குதிரையை வேண்டியுமன்று, பொலிவுற்ற பரிகள் பூட்டப் பெற்ற தேரினைக் கருதியுமல்ல. பாணரும், புலவரும், கூத்தர் முதலாயவரும் தம்பொருளெனக்கொள்ளின், நீ எனது பொருளெனக் கருதாது உரிமையோடு அவர்கள் பெற்று வாழக் கருதிய தன்மையை யுடையது நின் வாழ்நாட்கள். ஆதலால் உன்னைக்கண்டு களிப்பெய்துதற்காகவந்தேனையன்றி பிறிதொன்று கருதி வரவில்லை. பெரும! தாங்கள் எளியேற்குத் தங்களது திருவுருக்காட்சியை யளித்தமைக்கு, யான் 'என்றும் தங்கள் புகழல்லால் வேறொருவர் பெயரையும் எந்நா மொழியாமல் அமைக' என்னும் வேண்டுகோளை முருகப்பிரானிடம் வேண்டுவதன்றி வேறு செய்தற்கியலேன்.

**ஆய்:**—நலமிகு விறல்! நினக்கு யாம் காட்சியளித்தமைக்கு மகிழ்கின்றேம். நீ எம்பால் கொண்ட அன்பு மிகவும் போற்றுதற்குரியதேயாம். நீ எம்போன்ற வேளிர் குலமக்கள்பாற் சென்று வறிதே திரும்பின் எம்குடிக்கே இழுக்குண்டாகுமாதலால், யாம் தரும் பரிசிலைப்பெற்று மகிழ்க. (**காவலனை நோக்கி**) காவல! நீ இவ்விறலியின் மனமுவக்குமாறு நம் நாட்டு மலைபடு பொருள்களும் பொன், மணி, பவழக்கோவைகளும் தந்து வரவிடுக. (**அவையோரை நோக்கி**) பெரியோர்களே! யாம் இத்துடன் இன்றைய அவையை ஆண்டவன் அருளால் நிறைவேற்றுவோமாக.

**அவையோர்:**—(**எழுந்துநின்று**) 'நம் ஆய்குடிக்காவலன் அண்டிரமன்னன் ஆண்டவனின் திருவருட்டுணை பொலியப் பல்லாண்டு வாழ்க' (**அவை முடிதல்**)

**இயல் ௩—காட்சி ௨ முடிவு.**

## இயல் ௩ — காட்சி ௩.

இடம்:—ஆய்குடிப் புறநகர்.

உறுப்பினர்:—காவலன்; கணித நூலவலலான.

*[கொடை மடம்பட்டமையால் வறுமைபெற்ற ஆய், நாகநாடு சென்று வாராமைபற்றி, ஊர்க்காவலன் ஆரூடம் கேட்டல்.]*

**காவலன்:—(தனித்து வாடிய முகத்துடன்)** என்ன காலம்! உலகம், மிகவும் துன்பத்தைத் தரும் பொருளாகச் சிலரும்; இன்பப் பேழையாக ஒரு பகுதியினரும்; என்றும் நிலையாத பொய்மைக் காட்சியால் பொதிந்து தோன்றும் ஒருமயக்க 'இல் பொருள்' என ஒருவகையினரும் கருதுமாறு அமைந்துள்ள இந்நிலையில் எம்பொதிகைமலை நாயகனாய ஆய்வேள், உலகம் என்பது உயர்ந்த சான்றோர்களையும் உயிர்களின் உய்வுக்குற்ற பல நெறிகளையும்பெற்ற 'ஓர் இணையிலா வீடு' எனக் கொண்டு, இன்ப நெறி குறையா இல்வாழ்வில் ஈடுபட்டு வறுமையாளருக்குப் பெருந்துணையாகிப் பெரும்புகழ் பரப்பி வாழவில்லையா! 'அன்பு மிகுந்த அறத்தாறு நின்றோர்க்கு என்றும் இடர்ப்பாடு நேராது' என்ற மொழியும் பொய்யாயிற்றே. உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற வேறுபாடின்றிக் கொடுத்தவருக்கு இப்படியும் ஒரு குறைவு வரலாகுமா? குன்று போல் உயர்ந்துள்ள அவனது பொருட்குவியல் யாவும் இன்று ஒன்றுமில்லாமற் போயதே. ஐயகோ! அவனது அழகிய மனைவியர் தாங்கள் அணிந்திருந்த பன்மணி பதித்த பதக்கங்களால் விளங்கிய மார்பில் இன்று பருத்தி நூற்கயிற்றால் பிணிக்கப்பெற்ற மங்கலப்பணியல்லது மற்றையது கொண்டிலரே.

5

கொடுத்துக் கொடுத்து வறுமையை இவ் ஆய் வள்ளல் பெற்றாலும் அவனது மாளிகை மட்டும் உயரிய மணப்பொருள்களாலும் மணித் தவிசுகளாலும் விளங்கும் முடியுடை வேந்தர்களது சிறப்புமிக்க அரண்மனைகளினும் மிகுந்த பெருமையுடையதாகவே தோன்றுகின்றது. கொடை பிறந்த குடியல்லவா?

**கணிதநூலான்:**—(அவனறியாது அவன்முன் தோன்றி) என்ன காவலரே! தங்களைப் பார்த்தால் ஏதோ ஓர் ஆழ்ந்த கருத்துள் இருப்பவரைப்போன்று காணப்படுகின்றதே. நம் மன்னவர் ஆய்வள்ளல் நலந்தானே?

**காவலன்:**—நலந்தான். ஆனால் நான் அப்பெருமானைக் கண்டு ஆறு திங்களாயின.

**கணித நூலான்;**—ஆறு திங்களா! நீவிர் என்ன ஆய் மன்னனின் காவலர்தானே?

**காவலன்;**—ஆம் ஐயா, ஆமாம் எங்கள் தலைவர் ஆய்வேள் நாகநாட்டிற்குச் செல்வதாகக் கூறிச் சென்றார்; சென்றவர் விரைவில் வருவேன் என்றும் சொன்னார்; இதுவரையிலும் வரவில்லை. அவர் சென்று ஆறு திங்களாயின.

**கணித நூலான்;**—(வியப்பாக) என்ன காவலோய்! நாகநாட்டிற்கு ஏன் சென்றார்? நாடு நகரங்களைவிட்டுப் புரப்பாரில்லாது இந்நாடு தவிக்க, ஆறு திங்களாக வாராததற்கு அவர்க்கு என்ன நேரிட்டது?

**காவலன்:**—ஏன் ஐயா, நீவிர் யாவர்: மன்னன் ஆய் நாகநாடு சென்றது பலருக்கும் இங்குத் தெரியும். நீவிர் யாதும் அறியாதவர் போலுள்ளீரே?

**கணித நூலான்:**—என்னை நீர் அறியீரோ? நான் தான் பல முறையும் ஆய்மன்னனின் திருமுன்னர்

வந்து அவரிடம் இறந்தகால, நிகழ்கால, எதிர்கால வரலாறுகளை யெல்லாம் எடுத்துக் கூறிப் பலவுயரிய பரிசில்களைப் பெற்றவனாய்ப் பறம்புநாட்டுக் குறும்புட் சோதிடம் பால்நிறவண்ணன் என்பவன் ஆவேன். பலமுறையும் நான் உன்னை அரசனுக்குப் பணிசெய்து கொண்டிருந்த போதெல்லாம் பார்த்துளேனே, நினைவுக்கு வரவில்லை?

**காவலன்:**—எனக்குச் சிறிதளவு மறதி யுண்டு. மேலும் எந்நாளும் இடைவிடாது ஒருவர் பின் ஒருவராய், பரிசிலர்கள் மன்னரிடத்து வந்துகொண்டிருந்தமையால் உங்களைத் தனித்து நினைவுகொள்ள இயலவில்லை. அஃது இருக்கட்டும், தங்கள் பெயர்—பால்நிற வண்ணனோ (கணி—ஆம்) பால்போன்ற மென்மையான வெள்ளிய நிறம் பொருந்தியவர் என்பது தானே. (கணி—ஆம், அதன் பொருள்தான்) நன்று. குறும்புச் சோதிடம் என்றீரே, அதனால் தங்கட்கு ஏதாவது எங்களிடம் குறும்பு செய்ய நினைப்பீரோ? (கணி—நான் ஏன் குறும்பு செய்கிறேன்.) பிறகு 'குறும்பு' என்றால் என்ன பொருள்?

**கணித நூலான்:**—அடாடா! அதுவா! குறும்புள் சோதிடம் என்றல்லவோ சொல்ல வேண்டும். குறும்புள் என்றால் சிறிய பறவை என்று பொருள்; அஃதாவது பறவைகளைக் கொண்டு காலநிலை யறிதல் என்று கொள்ளவேண்டும்.

**காவலன்:**—மன்னிக்கவேண்டும். எனக்கு மொழிப் புணர்ச்சி தெரியாமையால் இதுவரையில் உங்களைப் பற்றிய உளப்புணர்ச்சி ஏற்படவில்லை. அது கிடக்கட்டும், தாங்கள்தான், வருங்கால, இருக்குங்கால,

சென்றகால நடவடிக்கைகளைப்பற்றிப் பறவைகளைக் கொண்டு சொல்லத் தெரியும் என்றீர்களே; இப் போது, ஆய்மன்னர்—எங்கே யுள்ளார்—எப்படி யுள் ளார்—எப்பொழுது வருவார்—பிறகு என்ன நிகழும்—என்பனவற்றை யெல்லாம் தொகுத்துக் கூறுமே, பார்ப்போம்?

**கணித நூலான்:**—நன்று—இப்படி இரும்—என் ருல் இனி நின்றுகொண்டு சொல்ல முடியாது.

**காவலன்;**—ஆகா—நன்ருக இங்கு வசதியாக இருந்து கொண்டு பார்க்கலாம்—நானும் இப்படி இருக்கிறேன்—(**இருவரும் கீழே உட்கார—கணியன் தனது பக்கத்திலுள்ள ஓலைச் சுவடியை அவிழ்த்தல்**).

**கணித நூலான்:**—காவல! இப்போது எந்தச் செய லையும் ஆசிரியன் வழியே பார்ப்பதற்கு முன்னே, ஆசிரியனுக இருப்பவனுக்குக் காணிக்கை செலுத்த வேண்டுவது ஒவ்வொருவரது கடமையாகும். அதி லும் தங்களது வாழ்க்கைப் பயனைப் பார்க்க நினைத் தாலோ தவருது கால்பணமாவது காணிக்கை செலுத்தவேண்டும். ஏதாவது இருந்தால் இங்கு என்முன் இரண்டு வெற்றிலை ஒரு பாக்கு இவற்ருேடு வைப்பாய்.

**காவலன்:**—ஏது! என்னிடம் ஒரு முந்திரிக் காசு கூடக்கிடையாதே. நான் இங்கு வரும்போதே நீங்கள் வருவதை அறிந்திருந்தால் கடனுவது வாங்கி வந்தி ருப்பேன். குற்றமில்லை, காசில்லாமல் பாருங்கள்.

**கணித நூலான்:**—நீ என்னப்பா அறியாதவனுயிருக் கிருய். காசில்லாமல் கணியன் ஒருநாளும் கணக்குப

புரட்டலாகாதே; எங்களது 'காற்சேயிறை நெஞ்சன்' என்னும் நூலில் ஒரு செய்யுளுண்டு, அஃதாவது,

கொள்ளப்பா பிறர்பயனைக் கூற வேண்டின்
　　குறிப்பாக நாலைந்து காசும் வேண்டும்
தள்ளப்பா குறை, குற்றம் யாவும் போகத்
　　தவறாது அவர்பெருமை பேச வேண்டின்
கள்ளப்பா சொல்விளம்பி, மதுவும் தேறல்
　　கலைதெளிவாய்ப் பலமொழியில் காட்டல் போல
விள்ளப்பா காலத்தைப் பார்க்க வேண்டின்
　　விலையாகக் காற்பணத்தில் விலகி டாதே

என்றிருப்பதனாலே எங்கள் தொழிலில், காற்பண மாவது பெறாது கூறின் தாழ்வும், சிறப்பின்மையும் உண்டாகும்.

**காவலன்:**—அஃதெல்லாம் முறைதான். காசில்லாத வனுக்கு என்ன சொல்லியிருக்கிறது உங்களது நூல்?

**கணிதநூலான்:**—சொல்லாதே என்றுதான் கூறி யுளது.

**காவலன்;**—ஓகோ! அப்படியா! என்னிடம்......... (தன் தலைக்கட்டை அவிழ்த்து, பாதி வெற்றிலை, கால் பாக்கு வைத்து) ஆமாம், காற்பணமாவது எவ்வளவு எங்கள் ஊரில் துட்டு, துக்காணி, காசு என்ற வழக்குத் தான் உண்டு.

**கணிதநூலான்:**—அப்படியா! காற்பணமாவது ஒன் றரைத் துட்டு.

**காவலன்;**—(இடை ஆடையின் முகப்பை யிழுத்து ஒரு முடிச்சை அவிழ்த்துக்கொண்டு) என் னிடம் முக்கால் துட்டுத்தான் உள்ளது. இந்த ஒன்ற ரைத் துக்காணியைப் பெற்றுக்கொண்டு (அதைக்

காட்டி வெற்றிலைமேல் வைத்தல்) ஏழையிடம் இரக்கங் காட்டிக் கருணை வைத்துச் சொல்லுங்கள்.

**கணிதநூலான்:**—நான் போய் வருகிறேன்: என் பிழைப்பைப் பார்க்கவேண்டும். 'ஆய்' என்று வந்தேன் ஆனால் ஒரு 'சேய்' தான் கண்டேன். என்னால் காற்பணத்துக்குக் குறைந்து கூற முடியாது (எழுதல்)

**காவலன்:**—அடாடா! இருங்களையா! (தலைப் பாகை முடிச்சினின்றும் மற்றொரு முக்கால் துட்டை எடுத்து வைத்துவிட்டேன். பிசகாமல் சொல்லும்.

**கணிதநூலான்:**—(மலர்ந்த முகத்துடன்) இது வன்றோ முறை; முறை தவறலாமோ—நல்லது—நூற்றுக்குக் குறைவாக ஒரு எண் சொல் (காவலன்:—அறுபத்தாறு) அறுபத்தாறுவது, ஆறுபத்தும், க, உ, ங, ச, ரு, சு ஆறுபத்தும், க, உ, ங, ச, ரு, சு, ஆறுஒன்றுமாகவுள்ளது: ஆறுபத்தும் ஆறு ஒன்றும் ஒரே, எண்ணாக இருப்பதால் நாம் நினைத்த வினை தவறாது முடியும். அஃதாவது 'ஆய்' விரைவில் வருவார் என்றதாகும். (காவலன்;—அஃது எப்படி?) அதுவா? அறுபத்தாறை அறு+பத்து+ஆறு என்று கொண்டு ஒவ்வொன்றின் முதலெழுத்தைக் காணவேண்டும். அப்போது 'அ', 'ப', ஆ' என்பன வரும் அவற்றுள் 'அ' என்பது அணிமையைக் காட்டும். 'ப' என்னும் எழுத்து இங்கே 'வ' கரத்தின்போலி—'வண்டி' என்றசொல் 'பண்டி, என வருவது போல இங்கு 'ப' இருக்குமிடத்தில் 'வ' பொருந்துவதால் 'வ' வருகையையும் 'ஆ' என்பது ஆய்வள்ளலையும் குறிப்பதால் 'அண்மையில் வருவார் ஆய்' என்பதாகும்; விளங்கிற்றா?

**காவலன்:**—தாங்கள் பெரிய புலியாகவல்லவோ இருக்கிறீர்கள்—இப்போது எங்கள மன்னர் எங்கே

யிருக்கிறார், என்ன செய்கிறார். என்ன செய்வார் என்ன செய்தார். என்பனவெல்லாம் விடாமற் சொல்லவேண்டும்.

**கணிதநூலான்:**—(தலையையாட்டிக்கொண்டுவிரலை எண்ணிக்கொண்டு) ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு ஐந்து—ஐந்தென்றால் பஞ்ச பாண்டவர்கள்—பஞ்ச பாண்டம்—அடுப்பு, சட்டி, கரண்டி, போகுணி தட்டு—தட்டுதலாவது உடுக்கு, மத்தளம், முரசியம், மணப்பறை—மணமாவது பூ மணம்; பூ—பூசைப்பூ; பூசம் தையிலே. கணக்கு சரியாகிவிட்டது. உங்கள் மன்னன் கடவுளிடம் பேரன்பு பூண்டவர்; எப்பொழுதும் விழா முதலியன செய்பவர்: எவருக்கும் வயிறு நிறைய உணவளிப்பவர்; இப்போது சற்று வறுமை யுற்று நாட்டைவிட்டு விலகியுள்ளார்; இவை உண்மை தானே?

**காவலன்:**—ஆமாம், ஆமாம், பிறகு சொல்லுங்கள்.

**கணிதநூலான்:**—க, உ, ௩ மூன்றில் அதுபோனால் க௩. பதினமூனறுக்கு, மேசம் மிதுனம், சிங்கம். சிங்கம் கொடுமையானது. கொடுமைக்குரியவன் செவ்வாய், அவன் நிறம் சிவப்பு சிவப்புக்குரியவன் திருவாதிரை. திருவாதிரையிலிருந்து எட்டாவது இடத்தில் சித்திரை இருக்கிறது. சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி, ஆவணி (தலையாட்டிக்கொண்டு) பத்தாம் மடத்துக்குரியவன் ஏழாம் மடத்தவனின் பார்வையினால் மூன்றும் மடத்துக்குரியவனோடு பகைத்துக் கொண்டுள்ளபடியால் எல்லாம் ஒழுங்காகப் போய் விடும். ஒரு கொடபுள்ள பறவை சொல்.

**காவலன்:**—(மூக்கில் விரலை வைத்துக்கொண்டு) கொம்புஉ, உள்ள்ள் ளஅஅ பறவைஐ—கொசுகு

(கணிதநூலான்:-கொசுகா அது பூச்சியல்லவோ) ஆமாம். அது கொசுகுதான். மாடு, ஆடு, மான் இவை தங்களது கொம்புகளால் நமது உடலைக் குத்திக் குருதியை உறிஞ்சுகிறதே. மேலும் பறவையைப் போல இறக்கையால் பறக்கிறது: முட்டையிட்டுக் குஞ்சு பொறிக்கிறது. அதனால் தான் பறவை என்றேன். ஆமாம், பறவைக்குக் கொம்புண்டோ?

**கணித நூலான்:**—அடாடா. இஃது ஒரு ஐயமா. மாடு இவற்றின் கொம்புகள் தலையிலிருப்பன போல சேவற்கோழி மரங்கொத்தி, வெள்ளைக்கிளி. மயில், கொக்கு இவற்றின் தலையிலுள்ள கொண்டையைத் தான் கொம்பு என்று கணிதநூலார் கூறுவர்.

**காவலன்:**—அப்படியா; மயில் என்று வைத்துக் கொள்ளுங்கள்.

**கணித நூலன்:**——மயில் முருகனது ஊர்தி: அவன் சிவபெருமான் சேய்; சிவன் உமையின் தோழன். உமையே உலகமீன்ற தாய் அவள் இல்லையேல் உலகம் இல்லை. ஆதலினால் ஆய் நாடன் மிகவும் கொடையாளியாக இருந்தான்; கொடுத்துக் கொடுத்து ஏழையாகப் போனான். வறுமையுற்றுத் தன்னாட்டிலிருந்து கொண்டு 'இல்லையென'க் கூற மனம் பொறாமல் அவனுடைய தோழன் நாக நாட்டு மன்னன்பாற் சென்றான்: இதுபோது மிகுந்த சிறப்புடன் திரும்புவன். அவன் ஆய்குடியை ஆண்டதோடு அமையாது தனது மனைவியர் சூழத் தேவ விமானம் ஊர்ந்து இந்திரன் எதிர்வந்து வணங்கி, வாழ்த்தி மகிழுமாறு தேவருலகத்திற்குச் சென்று அந்நாட்டையும் தனது ஆட்சியுட்படுத்துவான். ஆதலால் நீ கவலை கொள்ள

வேண்டா. விரைவில் உன்னுடனிருப்பான், நான் சென்றுவருகிறேன். (எழுதல்)

**காவலன்:**—மகிழ்ந்தேன் ஐயா! வணங்குகின்றேன் இப்படியல்லவா சொல்லவேண்டும் சோதிடம். சோதிடம் என்றால் உலகிலுள்ள எறும்பு முதல் யானையீறாகவுள்ள யாவுமல்லவா அதில் விழுந்து அடிபடுகின்றன. தங்களது கல்வி பெருகுக. போய் வாருங்கள் பால் வண்ணரே! போய் வாருங்கள்.

(வணங்குதல் இருவரும் பிரிதல்)

இயல் ௩—காட்சி ௩ முடிவு.

---

## இயல் ௪

இடம் :—கவிரமலைக்காடு

பொழுது :—மாலைப்போது

உறுப்பினர் :—ஆய், புலவர், படைத்தலைவர், பெருமக்கள்.

[நாகநாட்டினின்றும் சிறப்புடன் திரும்பிய ஆய், இடைவழியில் இறைவனது திருவுருவம் தனித்திருப்பதைக் கண்டு, தான் அரிதிற்பெற்ற சிறந்த ஆடையை அதற்குப் போர்த்து மகிழ்ந்தபோது, ஆய் குடியின் புலவரும் பிறரும் வரக் கண்டு, மகிழ்ந்து அவர்களுடன் ஆய்குடிக்குச் சென்று புகழுறுதல்].

**ஆய்** :—போற்றி என் வாழ்முதலாகிய பொருளே! நினது பூங்கழல் துணைமலரடிகளைத் தொழுகின்றேன். பெரும! நினக்கு அன்புசெய்யும் நெறியாகிய அறச்செயலிலீடுபட்டு, பசியினால், நோயினால், பகையினால், படிப்பினால் பின்னுற்றவர்க்குக் களைகணாயுள்ள, தந்நலங்கருதாத்தகைமையாளரிடம். என்னே! சிறப்பும் புகழும் வாழ்க்கையினின்பமும்

'நான்முந்தி' 'நான்முந்தி' என்றல்லவோ அடைகின்றன. இக்காட்சியைத்தம்மையேபெரிதென்றெண்ணி, உலகத்தொண்டிற்கு ஏற்பன புரியாத தமது உடல் பொருள் உயிரினையே ஓம்பி, பொருள் காத்திருந்து, உண்டுறங்கிச் சாவும் பேய் மக்கள் அறிவரோ? உயிர்க்குயிராய பெரும! வேண்டுவார்க்கு விரும்பிய வெல்லாம் அளித்தும், உலகப்பொருள் ஒவ்வொன்றினுள்ளும் எள்ளினுள் நெய்போல் இருந்து, அன்பு நெறியிற் படருவார்க்கு இன்பவூற்றாகத் தோன்றும் எம்பெருமானே! எனது நண்பனை நாகநாட்டுவேந்தன் நேரில் என்பாற் போந்து, என்னை அவன் நாட்டுக்கு அழைத்துச்சென்று, யான் என்றுமறியா இன்பத்துள் இருத்தி எத்தனையோ சிறப்புக்களை வழங்கி என்னைப் பெருமைப்படுத்த யான் செய்த நற்றவம் தான் என்னையோ? இல்லை! இல்லை!! நினது அருட்டிறந் தான் அவன் என்பால் அன்புகொள்ள விடுத்தது போலும் (சற்றுத் திரும்பி) ஆ! இஃதென்ன!! எம்பெருமானின் அருவுருவத் திருமேனி யன்றோ. ஐயோ! மலைபோற் குவிந்து, இருள்போற் கறுத்து, கண் பறிக்க மின்னி, இந்நிலமகள் அஞ்சி விதிர்க்குமாறு பெருமுழக்கமிட்டு, உறுமிவரும் மேகங்கள் சூழ்ந்த இக்கார்நாளில், தனியே இருந்து குளிரால் வாடி பொன்போன்றமேனி மண்போற பொலிவுகுன்ற இந்நடுக்காட்டில் கொடிய விலங்குடன் காட்டுப் பறவையும் நஞ்சுடன் உலாவும் பாம்பு முதலிய தீய உயிர்களும் சூழ்ந்திருக்க, எத்தனை நாள் இருந்து வாடுகின்றதோ? அறிந்தேன், அறிந்தேன். என் உள்ளத்தை அறியவே என் ஈசன் இக்கோலம் கொண்டான்போலும். மண்ணுற்ற மேனி பொன்னுற்று

விளங்க ஈதோ புரிகின்றேன் தொண்டு—(சிவலிங்கத்திற்கு மாலை அணிந்து தான்கொண்டுவந்த கிடைத்தற்கரிய ஆடையைப் போர்த்தி வணங்கும்போது, புலவர், படைத்தலைவர் முதலாயோர் ஆய் முன் வந்து அவனை வணங்குதல்) வருக, வருக! எம்புலவரே படைத்தலைவரே! வருக. யாம் இவண் இருப்பதை எவ்வாறு அறிந்தீர்கள்; யாவரும் நலந்தானே?

**புலவர்:**—எமக்குற்ற அன்னையாக உள்ள ஆயே! நீ நாகனுடன் எம்மைப் பிரிந்த நாள் முதல் ஆவைப் பிரிந்த கன்றுபோலும், அனலிற் பட்ட மெழுகு போலும் உள்ளத்தில் கவலை மீக்கூர வாடிய முகத்தராய் ஒவ்வொரு நாளையும் ஒரு ஆண்டாகக்கழித்து வாடினேம். நெருநலின் முதனாள் நம் ஒற்றன், இன்று, ஆய்குடிக்குத் தாங்கள் எழுந்தருளுவதாகவும் இனி வறுமை என்ற சிறுமையே தங்கள்பால் இல்லாதவாறு பல மதிக்க இயலாத மணிகளையும் ஒப்புயர்வற்ற உடைகளையும் தங்கட்கு நாகமன்னன் நட்புமுறையில வழங்கியதோடு, எவராலுங் கொள்ளுதற்கு இயலாத பெருமை மிக்க 'பொன்மணியால் ஆய ஒரு போர்வை'யையும் அளித்தாகக் கூறினன். அவன் கூறிய அளவில் யாங்கள் மழைமுகம் கண்ட பயிர் போலும், ஆவினைக் கண்ட கன்று போலும் மனக்களிப்பு மிகுதியால் துள்ளிக் குதித்து ஆடினேம். நாள் செல்லவில்லையே, குறிப்பிட்டபொழுது வரவில்லையே என்று ஏங்கினேம்; இன்று பகற்பொழுது எப்பொழுது புலரும் என்று பரப்பரப்புடன் நோக்கினேம். இன்றைய வைகறைப் பொழுதில் தங்கள் நண்பர் நாகநாட்டார் அனுப்பிய பல வரிசைகளும் பிறவும் நம் கோயில் நிறைவுற பணியாளர்கள்

கொண்டு வந்தார்கள். யாங்கள் அவற்றை முறையாக அணிவகுத்து வைக்குமாறு நம் பெருநிதித் தலைவர்க்கு ஆணை தந்து, தங்களை வரவேற்கவே இங்கு வந்தோம். தங்களது நல்வருகைக் கேற்பவும் எங்களது பேரன்பிற்கு எல்லையாகவும் தங்களை ஆண்டவன திருமுன்னர் அன்புநிறைந்த பெருந்தொண்டில் கண்ணுற்றோம். பெரும! எழுந்தருள்க. யாவும் நலனே.

**படைத் தலைவன்**:—நமது ஆய்குடி வேந்தன், நாக நாட்டானின் நண்பன், பெருங்கடவுளின் தொண்டன், களிற்றுநிறை மிக்க காவலன் அண்டிரமன்னன் வாழ்க! (யாவரும் = வாழ்கவே) நமது தலைவன் கொங்கரின் வலியடக்கிய கொடை மிகுவள்ளல், கவிரமலையாளன், ஆய் வள்ளல்! வாழ்க (யாவரும் = வாழ்க, வாழ்கவே!)

ஆய்—பெருங்குடி மக்களே! படைத் தலைவரே!' புலவர் பெருமானே !!! தங்களனபிற்கு மகிழ்ந்தேன். யாவும் அவனன்றி அசையாது, ஆதலால் அவனது திருவடிமலரைத்தொழுது நாம் யாவரும் நம் நகர் சென்று இனிது வாழ்வோமாக.

### பாட்டு

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்,
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக,
ஆழ்க தீய, தெலாம் அரன் நாமமே
சூழ்க, வையகமுந் துயர் தீர்கவே

முற்றிற்று

நலம்! நலம்!! நலம்!!!

# வள்ளல்
# மலையமான் திருமுடிக்காரி

க. மலையமாநாட்டுக் குடிப்பெருமக்கள், மன்னன் மலையமான் காரியின் சிறப்புநிலை கருதி முருகனை வழிபடல்.

உ. இராசசூயம் வேட்ட சோழன் பெருநற்கிள்ளியின் தூதுவர், மலையமானிடம் படைத் துணை வேண்டல்.

ங. இராசசூயம் வேட்ட சோழன் பெருநற்கிள்ளி, மலையமானின் வீரத்தை வியந்து மணிமுடிப்பரிசு வழங்கல்.

ச. மலையமான், தன் நாட்டை ஆரியர் முற்றுகையிட சோழனிடம் விடைபெற்றுத் தன் நாடு செல்லல்.

ரு. போர்ப்படைஞன், மலையமான் திருமுடிக்காரியின் வெற்றியை விளம்பல்.

சா. மலையமான் புலவர் கபிலர்பெருமானுடன் இயற்கை நலங் காணல் - வறுமையால் வாடிய புலவர் ஒருவர் பரிசு பெறுதல்.

எ. கபிலர் பெருமானும், காவலனும் அரசரது கொடையை வியத்தல்.

அ. அதியமான் நெடுமான் அஞ்சி மலையனின் மீது போர் தொடுக்க முடிவு செய்தல்.

கூ. ஆசிரியர் இறையனார், தமிழ்நாடு வேந்தர்கள் கொண்ட அழுக்காற்றின் காரணத்தால் தமிழ்

நாடு கொண்டுள்ள தாழ்வைத் தம் மாணவர் கட்கு விளக்கல்—சாலை முதல்வன் சாத்தன்மலைய மான் மக்கள் இருவருடனும் போந்து மலைய மான் நாடு துறந்த பின் ஓரியைக் கொன்றமை யையும் அதிகன் மீது போர் தொடுக்க எழுந்த தையும் கூறுதல்.

ம. மலையமான், அரியனை அமர்த்து, நாட்டைப் பெற்று இன்புடன் வாழ்தல்.

நலம்! நலம்!! நலம்!!!

**வரலாறு:**—இயலழகும் இறையருளும் பெற்றுக் கவின்பெறு வனப்புடையது நம் தமிழகம். இஃது இன்றும் பண்டும் என்றும் குன்றாப் புகழ்தரூஉம் கொடைச்செல்வம் கொண்டது. கொடையான் மேம் பட்ட கோப்பெரு மன்னரும் குறுநிலவேந்தரும் பெருநிலக் கிழவரும் மறுவிலா மக்களும் மிகுந்து வாழ்ந்த பண்டைநாளில் நமது தமிழகம் எல்லா நலனும் வளனும் கொண்டு உலகின் ஒப்புயர்வில்லா நாடாக மிளிர்ந்தது. அந்நாளினைக் கடைச்சங்க நாள் எனக் கூறுப. அஃது இற்றைக்கு ஓராயிரத் தெண்ணூறாண்டுகட்கு முற்பட்டதாகும்.

நம் தமிழகத்தே, தென்பெண்ணையாற்றால் திக ழுறும் திருக்கோவலூர் அந்நாளில் மலையமானாடு எனவும் மலாடு எனவும் பெயர் பெறும் நாட்டின், முதனகராக இலங்கிற்று. அந்நாட்டை, காரி என்ற ஒரு குறுநிலவேந்தன் புரந்துவந்தான். மலையமானாட் டின் தலைவனாகக் காரி விளங்கியமையால், அவன் மலையமான் காரி யெனவும் அழைக்கப்பெற்றான். மலையமான்காரி, ஒரு வள்ளல், தன்பால் வந்திரப்பவர்

எத்தகையராயினும் அவரது உள்ளமுவப்ப வேண்டு வன அளிக்கும் பெற்றியனுமாவன். அவனது நாட்டின் நெடுவரை முள்ளூர்மலை என்பது; அவனுக் குரிய வெற்றிமிக்க சிறந்த குதிரை, 'காரி' எனப் பெயர் பெறும்.

மலையமான் காரி கொடையான் மேம்பாடுற்றது போலக் கல்வி கேள்விகளானுஞ் சிறந்து விளங்கினன். கபிலர், மாறோக்கத்து நப்பசலையார் போன்ற புலவர் பெருமக்களது கூட்டுறவினின்றும் என்றும் பிரியா னய், அவர்கட்குக் களிறும் தேரும் களிப்புடன் நல்கி னன். மற்றுந் தன்னை நாடிய புலவர்கட்குத் 'தேர்க் கொடை' மிகுதியுஞ் செய்தமையால், இவன் '**தேர் வண் மலையன்**' எனவும் அழைக்கப்பெற்றான்.

கொடை வளனுங் கல்வி நலனுங் கண்ட தேர் வண்மலையன், வீரச் செல்வமும் விளக்கமுறப் பூண்ட னன். பாண்டியருஞ் சேரருஞ் சோழரும் அவனைப் போர்த்துணை நாடினராயின், அவனது தோள்வன் மையை எளிதிற் கருத வியலுமோ? ஒருக்கால் உறந்தை யாண்ட சோழன் பெருநற்கிள்ளி, மேற் கரைத்தொண்டியின் கோச்சேரமான், மாந்தரஞ் சேரலிரும்பொறையால் எதிர்க்கப்பட்டபோது, தேர் வண்மலையனின் படையுதவி கொண்டே அச்சேரனை வென்று, தன் நகரில் 'இராசசூயம்' என்ற ஒரு பெரிய வேள்வியையும் புரிந்தான். தேர்வண்மலையன் முடியுடைத் தமிழக வேந்தர்களாகும் சேரர் சோழர் பாண்டியர்கட்கு ஒல்லும் வகையானெல்லாம் ஒப்பற்ற உதவி புரிந்தமையான், மலையமான் திரு முடிக்காரி எனவும் சிறப்பிக்கப்பெற்றான். ஒரு பொழுது, ஆரியநாட்டு மன்னன் ஒருவன் திருமுடிக்

காரியை எதிர்த்து, மலையமானாட்டின்மீது படை யெடுத்து வந்தான். அஃதறிந்த வள்ளல், தம் படை சூழ நின்று அவ்வாரியனை முள்ளூர் மலைப்புறத்தே முதுகிட்டுப் போமாறு வென்று வாகை சூடினன். இவ்வாறு மாற்றலர் மருளவும் புலவர் போற்றவும் புரவலர் வாழ்த்தவும் பேறுபெற்ற வள்ளல் தேர் வண்மலையனும் திருமுடிக்காரியினது, புகழும் பெரு மையும், நாளேற, நாளேற இந்நாவிலமுழுதும் பரவ லாயின.

இஃதிவ்வாறாக மலையமானாட்டின் மேற்பால் குதிரைமலை நாட்டின் தலைவனாக 'வள்ளல் அதிய மான் நெடுமானஞ்சி' என்றொரு குறுநிலவேந்த னிருந்தான். அவன், புலவர் பெருமக்களாற் பெரிதும் சிறப்பிக்கப் பெற்றவன். இம்மாநிலஞ் சுருங்குமாறு அவனது கொடைவளம் பெருகியிருந்தது. அவன்றன் போர்வலி கண்டு முடிமன்னர் பலரும் அஞ்சினர். இத்தகைய வீரருள் வீரனும் அஞ்சி, எவ்வாறோ மலையன்மீது பகைமை கொண்டான்: அவனது நாட்டைப் பற்றவும் உளங்கொண்டான். எனவே, ஒருநாள் ஒரு பெரும்படையுடன் திருக்கோவலூரை யடைந்து, அதனை முற்றுகையிட்டான். மலையமானோ, நெடுமானஞ்சியின் படைவலிக்கு ஆற்றாது நகரை விட்டு ஓட, திருக்கோவலூரும் அதியன் ஆளுகைக் குட்பட்டது.

அதியமானின் போர்வலிக்கு ஆற்றாதோடிய காரி, தனது பெண்டு பிள்ளைகளைப் பிரிந்து, சேரமான் பெருஞ்சேர லிரும்பொறை என்ற வேந்தனை யடைந்து, படைத்துணை நாடினன். சேரமானோ, விற்றொழிலில் வல்ல, கொல்லிமலை நாடாளும் ஓரி

வள்ளலை வெல்லவேண்டுமெனப் பல்லாற்றானு முயலு பவனாதலால், காரியின் துணைகொண்டு கொல்லியைப் பற்றுதற்கு உன்னி, அவனது வேண்டுகோட் கிணங்கி னான். சேரமான் கருதியவாறே, காரியும் கொல்லி யின்மீது சேரன் படையைச் செலுத்தி, வள்ளல்-வல்வில் ஓரியை வானுலகானப் போக்கினன்.

திருமுடிக்காரியின் பெருந்துணைக்கு மகிழ்ந்த சேரமான் பெருஞ்சேரல், அவன் விழைந்தவாறு, தனது மாபெரும்படை சூழ, தகடூர் நகரைத் தாக்கி, அதியமானஞ்சியை விழுப்புண் பெற்றுப் போரில் வீழுமாறு வென்று, மலையமானாட்டுத் திருக்கோவ லூரை மீட்டுக் காரியின்பாற் சேர்த்தனன்.

வள்ளல் மலையமான் திருமுடிக்காரியும், பின்னர் மண்ணவர் போற்ற இம்மாநிலம் புரந்து, புலவர் போற்ற இனிதே வாழ்ந்து இறையருளோடு இன்புற் றிருந்தான்.

நலம்! நலம்!! நலம்!!

---

## இயல் க — காட்சி க

**உறுப்பினர்:**—அம்பலநாதர், நன்மாவன், இளநாகன், படை முதல்வன், மற்றும் பலர்.

**இடம்:**—திருக்கோவலூர்—குமரகோட்டம்

**காலம்:**—காலைப்பொழுது

[மலையமானாட்டுக் குடிகள், மன்னன் காரியின் சிறப் புக் குறித்து முருகனை வழிபடல்]

**அம்பலநாதன்** :—(நன்மாவன் மலர்தொடுக்க, இள நாகன் மகிழ்ந்து நிற்க, அம்பலநாதர் முருகன்முன் மொழிதல்.) உலகுயிர்க்கெல்லாம் தலைவ! நின் திரு வருள் நோக்கின்றேல், கங்குல் பகல் காலவெல்லையுட்

படுவதும், கருதரிய விண்ணும் கடிது செல்லுங் காற்றும் கரைகாணக் கடலும் இவண் கட்டுப்படுவதும் ஆகுமோ? நின்னைக் கருதுந்தொறும் அன்பராகுநர்க் கேற்படுகின்ற அமுதவாரி யன்ன ஓரின்பம், ஆ! எத்தகைய உயிர்ப்பேற்றை யளிக்கின்றது. கருவிலுருவா யமைந்த நாள்தொட்டு, கருத்தழிந்து உயிர்ப்புநீங்கிக் காலன் பின்னே ஏகும்வரையில், இவ்வுயிர், நினைவாலுஞ் செயலாலும் எத்துணை மாறுதல்களைப் பெறுகின்றது. இவ்வுலகில் வந்தவாறும், பின்னர் இவ்வுலகை விட்டுத் தான் செல்லுமாறு முணராது, என்னென்னவோவெல்லாம் ஒன்று பலகோடியாக உளத்திற் கொண்டு, உண்மை வழியறியாது, உருவழிந்து போகுநாளில், என் உயிரே! உயிரின் உயிர்ப் பொருளே! நினது அருளல்லாது நாயினுங் கடையேற்கு உய்யுமாறுண்டோ? கற்பொதும்பில் அடியாரைக் காத்த அருள் வேலா! நின்னையல்லால் எங்கட்கு வேறு துணையில்லை. (**அன்புடன் வணங்குதல் - பிறகு ஆண்டிருந்தாரை நோக்கி**) அன்பரீர், நமது வேந்தர் பெருமான், கண்ணிற்கு இமைபோல நமக்குள்ளார் என்பதை நான் விளக்க வேண்டியதின்று. அவர் நலம் பெருகினுற்றானே நாமும் இன்பத்துடன் அமைதியா யிருக்கலாகும். ஆதலால் நாம் இன்று, நம் நாடும் மொழியும் வேந்தனும் சிறக்க முருகனை வழிபடுவோம்.

**நன்மாவன்** :—அருள் நிறை செல்வ! தங்கள் கருத்துக்கு மாறாக யாங்கள் என்றும் எதுவும் கருத விரும்போம்; அந்நிலையிலும் யாங்கள் இல்லை. மேலும் 'நெல்லும் உயிரன்று, நீரும் உயிரன்று, மக்களின் நலத்தின்பால் கருத்தூன்றி, மண்ணில்

எவரும் மகிழ ஆட்சிசெய்யும் மன்னவனே, உயிரா கின்றான்' எனத் தாங்கள் பன்முறை கூறிவரும் பொன்மொழியை எங்கள் நெஞ்சுதான் மறக்குமோ பெரியோய்! மன்னர் மேன்மை கருதி யாங்கள் இன்னும் புரிவன எவை இருப்பினும் அவற்றையும் இன்னே கொள்வோம்.

**இளநாகன்**:—அண்ணலே! 'இம்மண்ணுலகில் நலந்தோன்றச் சீரும் செழிப்பும் மிகுந்த நாடாக இருப்பினும் இருள் அடர்ந்த நெடிய மரங்கள் செறிந்த காடாக இருப்பினும் அன்றி, ஆழ்ந்த பள்ள மோ, உயர்ந்த மேட்டுப் புலமோ ஆயினும் தகுதியும் பிறர்நலங்காணும் பெற்றியுமுற்ற பெரியார்கள் எங் குள்ளார்களோ, அதுவே நலமலிந்த நிலமாகும்' என்பது பொய்யா மொழியன்றோ? ஆதலின், இம் மலையமானுட்டின் புகழ் மலிந்தோங்குதற்கு நாளும் ஆவன புரியும் தங்களைப் போன்ற ஆன்றோர் நடுவில் நம் மன்னர் வாழ்க்கையில், அவருக்கு ஏதேனும் குறைவருமோ? நம் மன்னர் சிறந்து நீடு வாழ யாங் களும் தங்களுடன் ஆவன ஆற்றுவோம்.

**அம்பலநாதன்**:—நன்று, நன்மாவ? இளநாக! உங்கள் கருத்துக்கு மகிழ்ந்தேன். நான் இன்று, நம் மன்னரின் சிறப்புநிலை ஒன்று கருதியே தங்களிடம் இவ்வாறு வினவினேன். அஃதாவது நம் மன்னர்பெருமானின் பயிற்சிகளுள் மிகச்சிறந்த தாகவுள்ள 'குதிரைப் பயிற்சி' தொடங்கிய திருநாள் ஆகும் பெருநாள் இன்றுதான் ஆகும். 'காரி-காரி' என இத் தமிழகம்யாவும் சிறப்புற வழங்கும் நம் வேந் தரின் திருப்பெயர், பெருமை மிக்க போர்வலி நிறைந்த 'காரி' என்ற பெயரினைப் பெற்ற சிறந்த

குதிரையை அன்னவர் கொண்டதாலன்றோ ஆகும். மலையமான் காரி என்ற சிறந்த திருப்பெயரைக் கொள்ளுதற்கு முதன்மையாகவுள்ள இக் குதிரைப் பயிற்சிநாள் கொண்டாடவே, இன்று வழிபாடு செய்ய விரும்பினேன். நன்மாவ! வழிபாட்டிற் குரியன யாவும் திட்டம் செய்க. இன்று நம் படைத்தலைவர் 'கடியநெடுவில்லி' இங்கு வருவதாக மொழிந்துள்ளார். ஆதலால் நீ விரைவில் யாவும் திட்டம் செய்க.

**இளநாகன்:** —பெரும! அதோ அவரும் வருவதாகத் தெரிகின்றது. யானும் நன்மாவனுடன் வேண்டுவன புரிகின்றேன்.

**[கடியநெடுவில்லி தமருடன் முருகன் திருமுன் வருதல்]**

**அம்பலநாதர்:**—வருக, படைமுதல்வ! வருக! வருக!! இப்பொழுதுதான் தங்கள் வருகையைப்பற்றி ஈண்டுள்ளவர்கட்கு அறிவுறுத்தினேன். தாங்களும் இவண் அணுகினீர்கள்.

**கடியநெடுவில்லி:**—வணக்கம், அம்பலநாதரே! வணக்கம். நான் இன்று காலை மன்னவன் கோயிலுக்குச் சென்று, அங்கு நம் படையைச் சார்ந்த பல தகுதியினருக்கும் நம் வேந்தர் பெருமான் சார்பாகப் பல பரிசுகள் தந்து நம் நாட்டவர்களின் உரிமையைப் புரக்கவும் அவர்களது வாழ்வு சிறக்கவும் எம்மவர்கள் கொண்டுள்ள பொறுப்பினை வலியுறுத்து முகத்தான், ஒரு சிறு சொற்பொழிவு நிகழ்த்தி நமது அரச நன்றியை அறிவித்தேன். மேலும் நம் நாட்டின் பல பகுதிகளிலிருந்து பெருமக்கள் பலரும் இன்றுமாலை வருவார்களாதலான், யான் நம் முருகன் வழிபாட்டிற்குப் பின்னர், தங்களையும் உடன்கொண்டு செல்ல விழைந்

துள்ளேன். அதற்குத் தாங்களும் இசைவீர்களென வே கருதுகின்றேன்.

**அம்பலநாதர்**:—அவ்வாறே வருகின்றேன். கரும்பு தின்னக் கூலியும்வேண்டுமா? தங்கள்பின்னே மன்னவன் கோயில் செல்ல எனக்கு எத்தகைய தடையுமில்லை. இதோ நமது அன்பர்கள் வழிபாட்டிற்குரியன யாவும் திட்டஞ்செய்து விட்டனர். நாமும் நம் பெருமான் வழிபாட்டைத் தொடங்குவோமாக.

[அம்பலநாதருடன் யாவரும் முருகனைப் பராவுதல்.]

பாட்டு

பூமகள் மார்புறை திருமாலும்
புகழ்மலி நாமகள் துணையோனும்
வானவர் தேவியை மகிழ்வோனும்
வந்துவ ழிபட வாழ்வோனே!
தேவர் தேடியுங் காணுத
சிவனன் தேவியின் அருள் பாடி
வீரர்கள் போற்றிசை விழைவோனே
விளங்கிடு வேன்மயில் முருகோனே!

---

## இயல் க — காட்சி உ

**உறுப்பினர்**:—மலையமான், கடியநெடுவில்லி, புலவர், மலாடுடையார், அம்பலநாதர், அமைச்சர், தூதுவன்-வீரவேண்மா, காவலன்.

**இடம்**:—திருக்கோவலூர் மலையமான் கோயில்.

**காலம்**:—முற்பகல்.

[இராசசூயம் வேட்ட சோழன் பெருநற்கிள்ளியின் தூதுவன், மலையமான் காரியிடம் படைத்துணை வேண்டல்.

**கடியநெடுவில்லி**:—பகைஞர் அஞ்சுமாறு தோள்வலி பெற்ற பெரும! வணக்கம். இன்று நம் தமிழ்

நாட்டில் தொன்று தொட்டு வருகின்ற மூவேந்தர்கள் தம்முள் நட்பின்றி ஒருவரை யொருவர் பகைத்தும் ஒருவர் தாழ்விற்கு மற்றவர் மகிழ்ந்து நின்றும் அவை நிமித்தம் அறநெறி யல்லாதனவற்றைக் கைக்கொண் டும் நாட்டைப் பாழாக்கி வருகின்றனர். அன்றியும். புலவர் பெருமக்களைக்கூட வேவுகாரர்க ளென்றும் ஒற்றர்களென்றும் ஐயுற்று அவர்களைத் துன்பத்திற் குள்ளாக்கவும் கருதிவிட்டனர். இன்னும் நம் போன்ற குறுநில மன்னர்களின் கொடை, ஆட்சி நலம், மேன்மை இவற்றால் அழுக்காறு கொண்டு, வாய்ப்பு நேர்ந்த விடத்து, போர் செய்யவும் தலைப் பட்டிருக்கின்றனர். இவற்றை எல்லாம் நன்கு ஆய்ந்தே, நமது குதிரைப்படை, தேர்ப்படை ஆய இவற்றிற்கு உயர்ந்த பயிற்சிகளைத் தந்தும், யானைப் படை, காலாட்படை இவற்றை முன்னிருந்ததைவிட மிகுதியாக்கியும் நமது படைவலியைத் தங்கள் ஆணையை எதிர்நோக்கிப் பெருக்கியுள்ளேன். மேலும், நமக்கு மேற்பா லண்மையிலுள்ள வனும் வீரருட் சிறந்த வள்ளலுமாகிய அதிகமான், நம் நாட் டின் வளத்தை நாளும் பேசுகின்றனனும். அதனை யுணர்ந்த நாம் என்றும் ஆயத்தமாக இருக்கவேண் டும் என்பது எவரானும் வலியுறுத்தப் படுவதன் றோ? ஆதலால் தாங்கள் எனது செயலை ஏற்றருளு மாறு வேண்டுகின்றேன்.

**மலையமான்**:—படைமுதல்வ! நம் நாட்டின் உயர்வு காணவும் நம் குடிகள் பகைப்புறத்துற்ற தீமையால், பசி, பிணி முதலியவற்றால் துவண்டு மாளாது, அமைதியும் நல் வாழ்வும் பெறுதற்குரிய வகையில், நீவிர் முன்னேற்பாடாகப் படையினைப்

பெருக்கி, நாட்டின் பாதுகாப்பிற்காகச் செய்துள்ள நுமது தொண்டினைப் பாராட்டுகின்றேம். புதிதாக அமைத்துள்ள படைகட்குத் தக்க முறையிற் பயிற்சி யளித்துப் போர்க்களத்தில் வாகை சூடுமாறு அவர் களது உள்ளத்தில் திட்பமும், உடல் வலியில் ஒட்ப மும் தோன்றச் செய்க.

**புலவர் மலாடுடையார்** :—வீரர் மரபின் விளக்கா யமைந்த வேந்தே! நம் நாட்டிற்போல வீரப் பெண் மணிகளைப் பிறநாடுகளிற் காண்ப தரிது. நம்மவர் கொண்டுள்ள உறுதியைக் கூறுகின்றேன், கேண் மின்: 'ஆண்பிள்ளைகளைப் பெற்று வலிமை யுள்ளவர் களாகக் காப்பது பெற்ற தாயாகிய என்னுடைய கடமையாம்; தன் குலத்துக்குரிய படைக்கலப்'பயிற்சி யாகிய கல்வி, அதற்குரிய அறிவு, செயல்கள் ஆகிய இவற்றால் அவனை நிறைந்தவனாகச் செய்து தன் பிள்ளையின் உயர்வு மிகுமாறு செய்தல் தந்தையின் கடமையாம்; போர்க் கருவிகளாகிய வேல், வாள் இவற்றைச் செம்மையாகக் கூர்மைசெய்து தந்து அவனை ஊக்குதல், கொல்லனின் உரிமைச் செயல் ஆகும். அரசனே, அவ்விளைஞனின் நற்பண்புகளும் நல் வினைகளும் நாளும் பெருகுமாறு புரத்தல்செய் யின், அக்காளையன்னோன் மாற்றரசர் போரிலே ஒளி மிக்க வாட்படை கொண்டு, பகைவர்களைக் கொன்று அவர்கள் தம் யானையைப் பிளந்து குவித்து, வெற்றி மாலையுடன் வருவதையே, தனது உற்றகடமைகளா கக் கொள்வான்', என மிக்க வலிமை கொளுத்தும் வீரமொழியுடன் புகலும் நம் வீரத் தாய்மார்க ளிருக்க, நாம் எதற்கு அஞ்சுவது?

**அம்பலநாதர்:**—தமிழ்மொழி பேணும் தகைமையோய்! எங்கள் தாய் போன்ற மன்ன! எனது வணக்கம் உரியதாகுக! இன்று நமது நாட்டின் குடிமக்கள், தங்கள்பாற் கொண்டுள்ள அன்பினைத் தாங்கள் அறியாததன்று. ஆயிரம் சிறு மீன்களின் நடுவில் அவற்றைப் புரக்கும் தாய்மீன் நின்று காப்பதுபோல, தாங்கள் எங்களை அல்லும் பகலும் ஓம்பிவருதலை யாங்கள் மறக்க வியலுமோ? எத்துணை மன்னர்கள் கூடிலென்? மிக்க எண்களோடு கூடிய நால்வகைப் படைகளுங் கொண்டு மாபோர் தொடுத்து வந்தாலென்? யாங்கள் அனைவரும் எங்கள் படை முதல்வர் வகுத்த நெறியிலே யமர்ந்து, அரச கடமையைக் கழித்தல் என்ற வகையில் நில்லாது, உடல்களாய எங்கட்கு உற்ற உயிராகும் தங்களது வென்றியையே ஒருமுகமாக நாடிப் போர் புரியும்போது, அவர்களால் என்ன ஆகும்? பெரும! வலிய எலிகள் மிகப் பல கூடி யொலிப்பினும், ஒரு சிறு கருநாகம் சீறி உயிர்த்தால் அவை சிதர்ந்து ஓடிப்போமன்றோ?

**மலையமான்:**—அன்புமிக்க புலவர் பெருமானே! அம்பல நாதரே! தாங்கள் எம்மாட்டுக் கொண்டுள்ள பேரன்பினைப் போற்றுகின்றேம். தங்களைப் போன்ற தக்கார் இனத்தேமாகிய எம்மைச் செற்றார் எவர் தாம் எதுதான் செய்ய வியலும்? தாங்கள் போன்ற ஆன்றோர்கள் துணைகொண்டு வாழும் எமக்கு, எத்தகைய இடர்ப்பாடும் இவ்வுலகிலில்லை என்பது திண்ணம். (காவலன் முன் வந்து பணிதல்) ஏடா, காவல! யாது செய்தி?

**காவலன்:**—மலாடுடைய கோவே! நமது நெடு மணிமாட நீடுயர் வாயிலில் பொன்னி நன்னாடாம்

புகழ்ச் சோழநாட்டின் உறந்தை நகரிலிருந்து 'சென்னியின் தூதர்' என ஒரு வீரர் போந்து, தங்கள் ஆணை நோக்கிக் காத்திருக்கின்றார்.

**மலையமான்:**—நன்று காவல்! விரைவில் தக்க விருதுகளுடன் அத்தூதுவரை உள்ளே அழைத்து வருக. (காவலன் வெளிச்செல்லுதல்.) பெருமக்களே! எச்செய்தி கொண்டு சோழரின் தூதுவர் இவண் வருகின்றார் என அறிகிலேம். யாம் அறிந்தவரையில் அவர் நம்மிடம் ஏதேனும் ஒரு துணையையே நாடுவர் எனக் கருதுகின்றேம். (தூதுவர் உள் நுழைதல்)

**தூதுவன் வீரவேண்மா:**—முட்போன்ற கூரிய பற்களுற்ற பாம்பு, இடியொலியென மருண்டு அஞ்சுமாறு போர்முரசஞ் செய்து வீரர்நடுவே வெற்றிச் சமர்புரியும் கொற்றவ! மலாடுடைய கோவே!

'செந்தமிழ் நாட்டின் சீர்நிறை செல்வனும்
செம்மணி முடியுடை மூவருள் ஒருவனும்
கன்னிப் பொன்னியாம் கவின்பெறு காவிரி
தன்வளங் கொண்டு தனிப்பெரு நலங்கொள்
சோர்விலார் மிக்க சோழர்தம் நாட்டின்
ஊரெனப் புகழ்பெறும் உறையூ ரதனைத்
தலைமையாக் கொண்டு தன்புகழ் பரப்பிக்
கலைநலன் கொடைத்திறன் காவல் நேர்மை
அறநெறி இன்சொல் ஆன்றோர் தொடர்பு
மறம்பயில் போர்த்தொழின் மாண்புறப்பெற்றே
உற்றநின் நண்பன் கோற்றக் கோமகன்
எயில்மூன் றெரித்த இறையடி தொழுவோன்
ஒருதனி மகன்பால் உறுசிறு பிழைக்கு
மறுவிலா அவன்மேல் மாத்தேர் ஊர்ந்தே

*அறநெறி வழாஅது அரசு செலுத்திய*
*மறைபுகழ் மன்னன் மனுநீதி மரபினன்'*

ஆய சோழன் பெருநற்கிள்ளியின் திருவடிதொழூஉம் அடியேன், "தூதுவன் வீரவேண்மா", இங்குத் தங்களைப் பணிகின்றேன்.

**மலையமான்:**—பொன்னி நன்னாட்டுச் சென்னியின் தூதுவ! உனது வருகை எமக்கு நல்வரவாகுக! நும் நாட்டுப் பெருங்கோமன்னன் சோழன் பெருநற்கிள்ளி நலந்தானோ? அவர் எமக்கு விடுத்த செய்தி யாதோ?

**தூதுவன் வீரவேண்மா:**—தெண்ணீர்ப் பெண்ணையின் திருக்கோவலூரின் தேவ! எம்மன்னர்கோமான் சோழன் பெருநற்கிள்ளி நலமே. ஆயினும் அவருடன் அவர்தம் பகைவனுய சேரநாட்டுமன்னன் 'மாந்தரஞ் சேரல் இரும்பொறை' இதுபோது தக்க படையுடன் போர்தொடுத்து நிற்கின்றான். தங்களது போர்த்திறனும் தங்கள் படையின் நற்பயிற்சியும் எம் மன்னர் நன்கு உணர்ந்தாராதலால், தங்கள் படையுடன், அவரது செலவில் அவண் போந்து துணைபுரியுமாறு, தங்களை வேண்டிக்கொள்ளுகின்றார். நாள் மிகவும் அண்மைத்தாக இருப்பதால், தவக்கமின்றித் தாங்கள் இன்னே அங்கு வரவேண்டுமெனவும் பலகால் வேண்டுகின்றார். இதுவே எனது தூதுமொழியாகும்.

**மலையமான்:**—நன்று, தூதுவ! நாம் அதுபற்றி எம் அமைச்சர், படைமுதல்வர், பெருமக்கள் இவர்களுடன் கலந்து பின்னர் விளம்புவேம். அதுவரையில் நீவிர் ஈண்டுத் தங்குவீராக.

**தூதுவன் வீரவேண்மா:**—அவ்வாறே பெரும!

**மலையமான்:**—அமைச்சரே! நம் கோப்பெரு மன்னர், சோழர் பெருநற்கிள்ளியின் தூதுவர் வீர வேண்மாவிற்கு வேண்டும் வசதிகள் யாவும்விரைந்து புரிக. யாமும் ஒல்லையில் இன்று மாலையே கூடி, நம் வேந்தற்குத்துணைபோதல் குறித்து சூழ்ந்து ஆவன புரிவோம்.

**காவலன்:**—மலையர் கோவன் - மாபெருங்காரி, வாழ்க!

**யாவரும்:**--வாழ்க! வாழ்கவே!!

---

## இயல் க — கா—சி ௩

**உறுப்பினர்:**—சோழன்பெருநற்கிள்ளி, பாண்டியன் உக்கிரப்பெருவழுதி, சேரமான்-மாரிவெண்கோ, மலையமான்-காரி, படைமுதல்வன்-கடியநெடு வில்லி, புலவர் பெருமக்களிருவர்,காவலன்.

**இடம்:** — உறந்தை-வேந்தர் பெருமன்றம்.

**பொழுது:**—முற்பகல்.

**[இராசசூயம் வேட்ட கிள்ளி, காரியை வியந்து மணிமுடிச்சிறப்புச் செய்தல்.]**

**சோழன் பெருநற்கிள்ளி:**—வையை வளநாட்டு வழுதி! ஆன்பொருநை மேஞுட்டு வானவ! மலையமா நாட்டுத் தலைவ! நீவிர் மூவிரும் எமக்குப் படைத் துணையாகியும் இராசசூயத்துக்குதவியும் ஆற்றிய அருஞ்செயல் எம்முளத்தினின்றுமகலாது. நீவிர் மூவரும் முப்பெருந் தேவர்போல என்றுங்குன்று நலன்களைப் பெறுவீராக. (அவையோரிடம்) பெரு மக்களே! இவண் வீற்றிருக்கும் நங் காவிரி நாட்டினன்

பரும் தமிழன்னையின் தனிச் செல்வரும் அண்டர் நாயகனின் அடியவரும் ஆய இப்பாண்டிய மன்னர், உக்கிரப் பெருவழுதியாரைக் குறித்து யாம் யாது மொழிய வியலும்? இப்பெருவழுதியின் றிருமன்றத் தன்றோ, நந்தெய்வத் திருவள்ளுவனார் தம் திருக் குறளை அரங்கேற்றி மகிழ்ந்தனர். இத்தகைய பெருந் திருவினரை 'எம்ஆருயிரண்ணால்!' எனப் போற்றுவ தன்றிப் பிறிதொன்றும் மொழிய வறியேம். (வழுதி யின்பால்) பெரும! எம்மைக்கருதி ஈண்டுப் போந் தருளிய தங்கட்கு எமது உளமார்ந்த நன்றி என்றும் உரிததாகுக. (மறுபுறம் நோக்கி) எம்குடிமக்காள்! நம் உழுவலன்பர்-வானவர்கோன், நமக்கு என்றும் இனியர். பண்டு, பாண்டவர்க்குப் படைத் துணையாய போது, செருக்களஞ்சார்ந்த பசிப்பிணிமிக்க வீரர்கள் யாவருக்கும் அன்பர், அல்லாதார் என்ற வேறு பாடின்றி உணவு நல்கி 'பெருஞ்சோற்றுதியன் சேர லாதன்' எனச் சிறப்பிக்கப் பெற்ற சேரமானின் வழித்தோன்றலாகிய இம் 'மாரி வெண்கோ' நமக்குப் புரிந்த தொண்டிற்கு நாம் எழுமையுங் கடப்பாடுடை யேம். (சேரனை நோக்கி) எம் இனிய நண்ப! எம் நன்றி என்றும் தங்கட்கு உரிய தாகுக. (மன்னரை யும் மற்றுமுள்ளாரையும் பார்த்து) மாண்புமிக்க மன்னர் பெருந்தகையீர்! நம்முளம்பொருந்திய இம் மலையமான், எமக்காற்றிய உதவிகள் பலவாம். தொண்டி மன்னன் மாந்தரஞ் சேரலிரும்பொறை, வலியப் போர்க் கிவண் வந்தபோது, நம் தேர்வண் மலையன் தன்படைகளோடு எமக்குத் துணையாகிச் செய்த உதவியினை என்னென்பேம். அன்று வெற்றி தருங் 'காரி' யெனுந் தன்பரிமீ திவர்ந்து, மாற்றலர்

நடுவில் மின் என ஒளிசெயும் தன் வாளினை வீசி, மடைநீர் ஒப்ப, பகைவருடலினின்றுங் குருதி வெள்ளம் பீறிட்டுப்பாயச் செய்து சமர்புரிந்தகாட்சி, பேரூழியின் முடிவில் பிள்ளைமதி சூடிய பெருமான் றனது கொள்ளையுயிர் குடிக்குங்கூத்தினையே நினைவு படுத்தியது. இத்தகைய வீரருட் சிறந்த, நம்தோழமையைப் போற்றும் மலையமானுக்கு, நாம் மூவரும் ஒன்றுபட்ட உளத்தராய், இன்னே ஓர் உயரிய சிறப்புக்கொடை நல்கலாகுமெனக் கருதுகின்றேம்.

**உக்கிரப் பெருவழுதி** :—பொன்னி வளம் பெறு சென்னி! இம்மலையமான்காரி எம் பாண்டி நாட்டிற்குந் தோழனே யாவன். தொன்மைமிக்க பழந்தமிழ்க் குடி வேந்தராம் நம்பாற் சார்ந்துள்ளவாய ஆண்மை, கொடை, மாண்பு முதலாய பலவும் இக்காரியிடத்தும் நிலைபெற்றுள்ளன. ஒருக்கால, தன்படைவலியால், எமக்குந் துணையாயினன். இத்திறத்த மேனிலை பெற்ற இவற்கு, யாம் செய்யுஞ் சிறப்பு,நம்போன்றார் பெறுதற்குற்றது போன்றதாயிருத்தல் நன்று.

**மாரிவெண்கோ** :—காவிரி நாட்டுக் காவல! தமிழ் நலந்தழீஇய வழுதி!! மலையமான்காரி சோழரின் தோழன், பாண்டியரின் பாங்கன் என்பனபோல, சேரர்க்கும் சிறந்த நண்பனேயாவன். இம்மலையனின் கொடை, ஆண்மை, போர்வலி, செங்கோன்மை ஆய பன்னலங்களும் யாம் நன்குணர்வேம். தமிழக மணி முடி சூடும் வேந்தராகும் நம்மையொப்ப, இவனும் பிறப்பு, குடிநலம், ஆட்சி, கொடை, வீரம் ஆய இன்னோரன்ன தகுதிகள் யாவும் ஒருங்கே கொண்டுளன். எனவே, நம்மைப் போலவே இக்காரியும் ஏன் முடி சூடு மன்னனாயிருத்தல்கூடாது? அவ்வாறு செய்

வதே, நம் தோழன்பால், நாம் கொண்டுள்ள உண்மை யன்பினை, உள்ளவாறு அறிவுறுத்துவதாகும்.

**உக்கிரப் பெருவழுதி** :—நன்று நண்ப, நன்று! எம் உழுவலன்பன் சேரமான் உரைத்தனவற்றை, எம் முளமார ஏற்கின்றேம். மலையன், தொல்குடித் தோன்றல்; கொடை வளம் கொண்டவன்; வெற்றி மிக்க குதிரைப்படையோடு தேர்ப்படையுங் கொள் பவன்; மற்றும், மூவேந்தரது மாண்புறும் பெற்றி யனுமாவன். ஆதலால், யாம் இன்னே, இவற்கு ஒரு மணி முடிசூட்டி, இம்மலையனைப் பெருமைப் படுத்து வோமாக.

**பெருநற்கிள்ளி** :—தண் தமிழ் நாட்டுத் தலைவர் காள்! யாம் பெற்றுள்ள இன்ப நிலையினை எவ்வாறு கூறுவேம். தங்கள் திருவுளப்படியே, நம்மலையற்கு இவ்வுறந்தையிலேயே, எம் இராசசூய வேள்வியின் இறுதியில் 'மணிமுடி சூட்டுவிழா' நடைபெறுவ தென்றால், எமக்குற்ற உவகைப்பெருக்கைஅளவிடற் கியலுமோ' அன்பரீர்! தங்களருளால் இன்று பெரும் பேறுற்றனம். அம் மணிமுடிசூட்டு மங்கலவினையை அவற்குச் செய்ய, எம்மை உரிமைப்படுத்துவீர்க ளாக.

**மாரிவெண்கோ** :—வளவ! தாங்களே தகுதியுடை யவராவீர். எம் இணக்கம் அதற்கு என்றும் உண்டு.

**உக்கிரப் பெருவழுதி** :—சீர்மலி சென்னி! இம் மங்கலவினையை மாண்புறக் கொள்ளத் தாங்களே உரியவராவீர். ஏனெனில், இந்நல்விழா, தங்கள் உறந்தையில் நடைபெறுகின்றது; மற்றும் வெற்றி யுறமுடித்த இராசசூய வேள்வியால் வானுலகத்து வருணபதம் பெற்றுள்ள தாங்கள், இம்முடிசூட்டு

விழாவைப் புரிவது மிக்க பொருத்தமுஞ் சிறப்பு மாகும்.

**பெருநற்கிள்ளி:** —தமிழ்ப் பெரும்பாண்டிய! கரி வரைச் சேர! புலவர், பெருமக்களே!! 'உடுக்கை யிழந்தவன் கை போல வாங்கே யிடுக்கண் களைவதாம் நட்பு' என்ற பொய்யில் புலவரின் பொருளுரை யைத் தேறுமுகத்தான், எமக்குத் தன் நாற்படை சூழ எம் நாட்டிற்போந்துதவியும், எம் நண்பர்களாய சேரபாண்டியருக்கும் செவ்வன் ஒருக்கால் செருத் துணை நின்றும், அன்பு, ஆண்மை, இன்னிலை, ஈகை ஆய பலவால் என்றுங்குன்றா இசைநிறீஇயும், உயர்ந்த குடிப்பிறப்பும் வீரந்தழீஇய தண்ணுமைத் தோட் சிறப்பும் பொருந்த, பெண்ணை நல்யாற்றின் பெருவளங்கொண்டு, முள்ளூர்வரையைத் தன்பா லாக்கித் திருக்கோவன்மாநகர் தன் அரசிருக்கை யாக, புலவர்கட்குற்ற புகலிடமாகும் 'மலாடு' எனப் பெரிய மலையமானாட்டின் தலைவனாய காரி மன்னற்கு, தண்தமிழ்த்தேவியின் பண்மொழி பயிலும் முடி யுடைத் தமிழக மூவருள் ஒருவனாய் உறந்தையை யாளும் உயர்குடிவேந்தன், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்ற யாம், எம் மூவரை யன்றிப் பிறரெவரும் இத்தமிழகத்தே மணிமுடி சூட லாகாதென்ற மரபினைமாற்றி, எம்மலையமான் காரி யின் பெறலரும் பெற்றிநோக்கி, சேர பாண்டியர் தம் திருமொழி பெற்று, தமிழக மூவேந்தர்தம் சார்பி னின்று, எம்போன்ற இறையுடைமைதரும் பெரு நோக்கால், எமது தொடிவளை ஒலிக்குங் கைகளான் முழுமுதலின் றிருவருளை நினைந்து,மெய்ம்மொழியுளத் தூய்மையோடு இம்மணிமா முடியினைச் சூட்டுகின்

றேம். (முடிசூட்ட, யாவரும் மலர் தூவ) திருவாளர்களே! இதுமுதல் நாம் இத்தேர்வண் மலையனை, 'மலையமான் திருமுடிக் காரி' என மொழிவோமாக.

**படைமுதல்வன் கடியநெடுவிடன் :—** எம் மலையமா மன்னன், மாரிநிகர்கையன், மாண்புதழூஉம் வள்ளல், மலையமான் திருமுடிக்காரி, வாழ்க!

**யாவரும் :—** வாழ்க, வாழ்கவே!!

**திருமுடிக்காரி :—** சீர்மலிந்த செந்தமிழ் நாட்டு மாண்புறு மன்னர் பெருந்தகையீர்! எனது உளமார்ந்த வணக்கத்தை ஏற்றருள்வீர்களாக. எளியனின் சிறுபணிகளைப்போற்றி, ஒன்றிய உளத்தால் நீவிர் மூவிரும் வழங்கிய, என்னனையர் என்று மெய்த வியலாத இப்பெரும் பேற்றிற்கு, யான் யாது கைம்மாறு புரியக்கூடும். தங்களது பணிவுள்ள நண்பனுய் இவ்வாறு ருள்ளளவும் இயன்றவாறெலாம் தொண்டு புரிந்து எனது கடமையை ஆற்றுவதொன்றே எற்கியலும். இதனை யான்என்றும் மறவேன் என்பது திண்ணம்.

**பெருநற்கிள்ளி:—** தேர்வண் மலைய! நீ செந்தமிழ்த் தேவியின் சீரடி பராவி என்றும் புகழுற இனிதே வாழ்க!

**பெருவழுதி :—** திருமுடிக்காரி! உமையொருபாகனின் திருவருட்பெருக்கால், எல்லா நலனும் பொருந்த வாழ்க! நினது நட்பும் செயலும் எமக்கு இன்றுபோ லென்றும் பொலிவதாகுக.

**மாரிவெண்கோ :—** மலாடு புரக்கும் மலையமான் திருமுடிக்காரி! முருகவேளின் பெருங்கருணை நலத்தால் நீ, ஒப்பற்ற வீரனுகவும் தன்னலமழித்த நன்னலனுகவும் மிளிர்வாயாக.

**கடியநெடுவில்லி** :—வாழ்க எம் மூவேந்தர் !
**யாவரும்** :—வாழ்க, வாழ்க !
**கடியநெடுவில்லி** :—வாழ்க எம் திருமுடிக்காரி ! !
**யாவரும்** :—வாழ்க, வாழ்கவே ! !

---

காட்சி ௪.

**உறுப்பினர்** :—இராசசூயம் வேட்ட சோழன் பெருநற்கிள்ளி; மலையமான்-திருமுடிக்காரி. உறையூர் முதுகூற்றனூர்.

இடம் :—உறையூர் கோமன்றப் பூங்கா

பொழுது :—மாலைப்போது

[மலையமானொடு ஆரியனொருவனுலச்சுறுத்தப் பெற்றபோது, திருமுடிக்காரி அஃதுணர்ந்து தன் நாடு செல, சோழன்பால் விடைபெறுதல்.]

**இராசசூயம் வேட்ட சோழன்** :—(தனித்து) எங்கும் நிரம்பிய பொருளே; இடுக்கண், அவா, இன்பம், அழுக்குடைமை ஆய பல கட்டுகள் யாவுங்கடந்த கருணையங்கடலே; அன்பருளக் கோயிலமர் இன்புருவா மொளியே! நினது அருட்செயலை என்னென் பேம். (கூத்தனுரைநோக்கி) புலவர் பெரும! சென்னுளின் முன்னர்ச் சேர விரும்பொறைக்கு அஞ்சி ஏங்கியயாம், இதுபோது எளிதிலெய்த வியலா இராசசூய வேள்வியை முடித்து இன்னிலை பெற்றுமகிழ்வது கனவோ அன்றி நனவோ? யாவும் அவனன்றி அசையா. எம்தோழன் திருமுடிக்காரி தக்கவாறு உதவியதாலன்றே, இன்று யானைமருப்புடைச் சேரனும் ஒளிநல் முத்துடைப்பாண்டியனும் எம் கலந்த கேண்மையராகி எமது இராசசூயத்தையும் இனிதே நிறைவேற்றித்தந்தனர். யாமும் இராசசூயம் வேட்ட

சோழன் பெருநற்கிள்ளி என எவரும் போற்ற இவ் புறந்தைப் பகுதியின் சோணாட்டிற்குற்ற மன்னவ றய்த் திகழ்கின்றேம்.

**உறையூர் முதுகூத்தனார்:**--பெரும்பேறுற்றபெரும! ழும் மலையமான் தங்கள்பால் அன்புசெலுத்திய பாறே மற்றைச் சேரபாண்டியரிடத்தும் அன்புமிக் ாருயினன். இஃதுணருங்கால் காரி ஒரு குறுநிலக் ிழவன் மட்டுமல்லன் தங்கள் போன்ற முடியுடை வேந்தர்க்குற்ற தகுதியினனுமாவன். நீவிர் மூவிரு ளித்த முடிப்பரிசும் அவற்கு மிகவும் ஏற்புடைத்தே. ரனினும், அவலையொத்த பிற குறுநிலத்தலைவர்கள் ருக்கால் அவன்பால் அழுக்காறு கொள்ளவுங் டுடும்.

**இராசசூய-சோழன்:**--அதற்கு என் செய்வது? டயரிய தகுதியைப் பெறுதற்குற்ற ஊழ்வலி மிக் ாரை எவராற்றான் தடுக்க வியலும்? எம் தோழன் மலையமான் திருமுடிக்காரி என்றும் இனிதே வாழ் பாருக.

**உறையூர்ப் புலவர்:**--பெரும! அம்மலையனும் அதோ தங்களைநாடி மிக்க விரைவாக இவண் வரு பதைக் காண்மின்.

**சோழன்:**--வருக எம் காரி! ஏன் இவ்வாறு விரைந்து வந்துள்ளாய்? நினக்கு யாம் புரியவேண்டு ய தியாது?

**மலையமான் திருமுடிக்காரி:**--எனது பணிவிற்குரிய தலைவ! யான் விரைவாக, இன்றே என்னாட்டிற்கேக, நடைமொழி பகராது விடை மொழிந்தருள இறைஞ் சுகின்றேன்.

**சோழன்:**--எம் இனிய! ஏன் அவ்வாறு? நினக் குற்றது என்?

**திருமுடிக்காரி:**--பெரும! பொறுத்தருள்க. இதனை நோக்குவீராக. (ஒரு முடங்கலை நீட்டுதல்) இம்முடங் கல், இன்று என் படைமுதல்வன் என்பால் வர விடுத்தது.

**சோழன்:**--முதுகூத்த! இதனை நோக்குமின்!

**புலவர்:**--(முடங்கலை விரித்துப் படித்தல்) 'மலா டுடைய எம் திருமுடிவேந்தே! தங்கள் திருவடிமலர் களை என்றும் முடிமிசையணிசெய்து கொள்ளும், படைமுதல்வனும கடியநெடுவில்லி என்ற தங்கள் அடிமை மிக்க பணிவுடன் தேவரீர் திருமுன்னர் விண் ணப்பிப்பது யாதெனின், மொழிகின்றேன். பெரும! நம் மலாட்டினை முற்றி, வெற்றிபெற, ஆரியநாட்டு வீரியனொருவன், தன் நாற்படைசூழ நாடுகின்றான். யானோ, தங்களாணையை நோக்கி நம் அமைச்சர், பெருங்குழுவினர், ஊர்த்தலைவர், ஆய சான்றோர் களது பேருதவியினால், மிக விரைவினில், வருமுன் காப்போனாக, யாவும் திட்டம் செய்துள்ளேன். நமது திறம்பெற்றுள்ள படைகள் முறையாக அணி செய்விக்கப் பெற்றுள்ளன. இனி, பகைஞர்கள் தென்னாட்டின் எல்லையை எந்நாளினும் கருதாத வாறு, போரில் வாட்டி அவர்களை யொழிக்க, வேண் டுஞ் செயல்கள் யாவும் விளக்கமுறப் பெற்றுள் ளோம். நாம் எதற்கும் அஞ்சவேண்டுவதின்று. இதுவே செய்தி வணக்கம். நலம், நலம்."

(சோழன் தலையசைப்புடன் மலையமானை நோக்க)

**திருமுடிக்காரி:**—பெருமன்ன! இப் போர் கருதி யான் கவல்பவனல்லேன். என் படைஞர் தவறுது

வெற்றி பெறுவர் என்றவுறுதியும் எற்குண்டு. எனினும், என் நாட்டினர் மாற்றலரோடு மாபோர் புரியும்போது அவர்கட்குத் தலைவனாய யான் இவண், விருந்துண்டு மகிழ்ந்து வாழ்வது பொருந்துமோ? ஆதலால் ஐய! எனக்கு, இன்னே விடைதந்தனுப்புக.

**சோழன்:**—எமது உளக்கோயிலில் என்றும் மேவிய இறைவனால் எல்லாநலனும் எய்துதற்குற்ற என் தோழ! நின்னைப் பிரிதற்கு எம் உளம் நைகின்றது. உண்மை நண்பனாய நினது கூட்டுறவால், 'யாம் பெற்ற இன்பம் இவ்வையக முணரும். யாம் நின் தகுதியினையும், தோழமையையும் பெரிதும் போற்று கின்றேம். நீ, எம்பாற் கொண்டுள்ள அன்புடைமைக்கும் எமக்காற்றிய பேருதவிக்கும் யாம், எவவாறு எமது நன்றியினை நின்பாற் சேர்ப்பதென இதுபோது அறியாதவராயினேம். எம் காரி! நீ, நெடிது வாழ்க! நீ, என்றும் பொன்றாப் புகழுடன் பொலிவுறுக; நீ, இனிதே சென்று நின் மாற்றலனைப் போரில் மண்ணுற வீழ்த்தி. வாகை சூடி, பெரு மகிழ்வு எய்துக; வாழிய காரி! இனிதே சென்று வருக!! (காரியைத் தழுவிக் கொள்ளுதல்)

**திருமுடிக்காரி:**—அடைநெடுங்கல்விப் புலவர் பெரும! என் அன்பார்ந்த தலைவ! சென்று வருகின் றேன். (மகிழ்வுடன் கைகூப்பி) சென்று வருகின் றேன்! விடை பெறுகின்றேன்! (பணிந்து பிரிதல்.)

## இயல் உ — காட்சி க

**உறுப்பினர்** :—நாகன், காடன், வேற்படைஞன் மாரி

**பொழுது** ;—வேனிற்கால ஒரு பகற்பொழுது.

**இடம்** :—திருக்கோவலூர்ப்புறம்.

[வேற்படைஞன், காரியினது வெற்றியைக் காவலன்பாற் கூறல்.]

**நாகன்** :—(தனித்து) ஏ, அப்பா! இவ்வெயிலி லலைய எவராலாகும்? கள்ளியுங் கரிந்து போகுமாறு காய்கிறதே! கழுதை கெட்டால் குட்டிச்சுவரை யடையும்: ஒரு தடியன்; மேலுங் கட்டிலிருந்து விடு பட்ட காளை போன்றவன், தொலைந்தால் எங்கு சென்று தேடுவது? (தன் தோழனிடம்) ஏடா, காட! இவ்வழி நெடுகச் சிறிது தொலைவு சென்று பார். அதற்குள் தென்படாவிடில், நேரே நாம் திரும்புவோம். இனி யான் நடக்கவியலாது. காடு மேடெலாம் அலைந்தமையால் உள்ளங்கால்கள் கொப் புளங் கொண்டன: அடியிட்டால் முள்மீது நடப்பது போல் நைகின்றன.

**காடன்** :—நல்லவேளை. நீங்கள் நாடுபவரும் இதோ வருகின்றார். எனக்கு அலைச்சல் குறைந்தது.

**நாகன்** :—(வருபவனிடம்) அண்ணு! கும்பிடுகின் றேன்: எங்கிருந்து இப்பொழுது வருகிறீர்கள்? உங்களைத்தேடியே இவ்வெயிலில் கால்கடுக்க அலைந் தோம்: நல்லவேளை, எங்கள் கண்ணிற்பட்டீர்கள்.

**வேற்படைஞன் மாரி** :—என்னப்பா அவ்வளவு இரக்கம்? எனக்குள்ள அஞ்சற்செய்தி அப்படி யென்னுளது?

**நாகன்** :—நமது தலைவர், கையோடு தங்களைக் கொண்டு வரச் சொன்னார்; இஃதன்றி வேறொன்று மில்லை.

**வேற்படைஞன் மாரி**:—விளைந்ததா வினையியல்!...... என் செய்வது? மழைநின்றும் தூவானம் நிற்கவில்லை. வேலையாவும் முடித்து, விடுதிபெற்று வீடுசெல்லும் போதுகூடக் கூப்பாடு ஓயவில்லை...எய்தவனிருக்க அம்பை நோவதால் ஆய பயன் என்? என்ன கேடு வருமோ?

**நாகன்**:—அந்தோ! ஏனிவ்வாறு வருத்தம்?

**வேற்படைஞன் மாரி**:—உனக்கு இஃது ஒன்றுந் தெரியாது. நான் உண்மையாகக் கூறுகின்றேன், பார்; நான் செத்துப்போனதுஞ் சுடுகாடுகூடச் செல்லமாட்டேன்.

**நாகன்**:—ஐயகோ! ஏனண்ணே, இப்படிக் கவலைப் படலாமோ? உங்களுக்கென்ன வந்துற்றது; ஊதிய மில்லையா, உணவுக்குறைவா, உடைக்கு வாட்டமா, அன்றி உறைவிடங்கெட்டதா? யாவும்! மிகுந்துள்ள நீவிர் இவ்வாறெல்லாங் கூறுதலாகாது.

**வேற்படைஞன் மாரி**:—நீ மொழிவது மெய்தான். நாக! எனினும் எனது நிலைமை அவ்வாறுளது. உலகில் மகனாகப் பிறத்த லரிது; பின்னர், நல்லுடம்பும் பிணியிலா வாழ்வும் பெறுதல் அதனினுமரிது; மற்றும் நல்வாழ்வுடன் ஆண்மைகலந்த வலிமையோடு மிளிர்தல் யாவினு மரிது. இவை யாவுங்கூடியும், அமைதியோடு இன்பமாகச் சின்னாட்களாவது மகிழ்ச்சிபெறுவிடில் அப்பிறப்பாற் பெற்ற பயன் தான் என்னை?

**நாகன்:**—பயனில்லை என்பது உண்மையே; என்றாலும், இவ்வுலகம் இன்ப துன்பம், களிப்பு கவலை. நன்மை தீமை என இணைப்புற்றிருப்பதை மறந்து கூறுகின்றீர்களே.

**வேற்படைஞன் மாரி:**—மறக்கவில்லை; மற்றும் துன்பம் முதலாயவற்றிற்கு அஞ்சுபவன் யானல்லன். பொதுவாக, ஒருவன் பல்லாண்டுகள் துன்புற்றால் சில்லாண்டுகளாயினும் இன்புறல் வேண்டும், என்றுதான் விரும்புகின்றேன். பிறந்த நாள்தொட்டு, செக்கிலோடும் எருதுபோலத் துன்பம், கவலை, துக்கம் இழிவு, ஏக்கம், எரிவு ஆய இவற்றுள்ளே மீண்டும் மீண்டும், சுழன்று சுழன்று செல்வதால், இவ்வாழ்வு நஞ்சாகவன்றோ மாறும்.

**நாகன்:**—யாவும் பொய்யன்று; இன்று உங்களுக்குற்ற தீங்கு என்ன?

**வேற்படைஞன் மாரி:**—நான், மலையன் படையிற் சேர்ந்து இதுபோது பன்னீராண்டுகள் கழித்தேன். தமிழகம் முழுதுஞ் சென்றுளேன். ஒருநாள்கூட ஓய்வு பெற்றேனல்லேன். நம் தலைவர் கடியநெடுவில்லியோ, அவர்தம் பெயருக்கு ஏற்ப, என்றும் போர்க்களத்தே வாழுபவர். மற்றும் அவரது ஆணையோ, சொல்லுதற்கியலாதது. 'இன்றே யாவருஞ் செல்க சேர நாடு' என்பர்; அவ்வாறு சென்று ஆவனபுரிந்து மீளுமுன், 'புறப்படுக சோழநாடு. நாம் இன்னே விரைந்தெழாவிடின், அந்தோ, சோழர்பெருமான் மிக்க இன்னலுறுவர்' என ஆண்டு விடுப்பர். சோணாட்டாருடன் கலந்து நின்று போரிற் பகைஞருடன் பெருஞ் சமர் ஆற்றி, அக்களைப்பு தீர்வதன் முன்னரே. 'எம் வீறுடை மக்காள்! நம் மன்னரின்

உயிர்த்தோழன் பாண்டியன் நமது துணையை நாடு கின்றான். யாம் விரைந்து அவன்பாற் செல்லாவிடின், அந்தோ, அவன், பகைஞரால் கெடுவான்; நம் வேந்த ரது பெயருக்கும் இழுக்குவரும்; நம் வள்ளலும் வருந் துவர். ஆதலால், எடுமின் படைக்கலம்! சேர்மின் பாண்டியர்நாடு' என்று எங்களது உளங்கரையப்பேசி அவர் கருத்துப்படியே எம்மை ஆடச் செய்வர். மிக்க திறன் பெற்றவர் நம் தலைவர். இவை போதாதென்று நம்மூர்க்கு, ஆரியப் படையெடுப்பு என்ற ஓர் அலங் கோலப்போரும் வந்தது. இவ்வாறிருந்தால், எங்கட்கு அமைதி, ஓய்வு, இன்பம், இவை எப்படிக்கிட்டும்? அன்பர், உறவினர், ஆன்றோர் ஆய இவருடன் கூடி மகிழ்வதுதான் எப்பொழுது? நீ தான் மறுமொழி கூறு, பார்ப்போம்.

நாகன்:—எனக்கு என்ன தெரியும்? வீரர்நிலை யென்றால் துன்பந்தான். உறவு, நட்பு இன்றிப் பன் னீராண்டுகள் போக்க என்னால் முடியாது. தங்கட் குத் தவறாது ஓய்வும், விடுதியும் மிகமிக வேண்டற்பா லதே. ஏன், அண்ணா! ஆரியப்படைதனை வென்ற செய்தி விளக்கமாக எனக்குத் தெரியாது; அருள் கூர்ந்து அதனை எனக்கு அறிவிப்பீர்களோ?

வேற்படைஞன் மாரி:—அதற்கென்ன, சொல்லு கிறேன். நம்வேந்தர் நமது படையுடன் உறையூர்ச் சோழர்க்குத் துணை சென்று, அன்னவரது இராச சூய வேள்வியையும் முடித்துத்தந்து ஆண்டுச் சில திங்கள் அளவளாவியிருந்தபோது, பிற குறுநிலத் தவரது சூழ்ச்சியினால், ஆரியநாட்டான் அதுவே தக்க செவ்வியெனக் கருதி நம்முடன் போர்புரிய ஒரு

பெரும் படையுடன் நமது முள்ளூர் மலைவரையில் வந்தனன்.

**நாகன்:** - இஃதெனக்கு நன்கு தெரியும்.

**வேற்படைஞன் மாரி:** —ஆரியனுக்கு, நமது படைகள் யாவும் உறையூர்ச் சமர் முடிந்ததும், திருக்கோவலூரர் திரும்பியசெய்தி தெரியாது. மற்றும், நம் படை முதல்வரோ, ஒற்றர்வழியே அவனது வருகையை முன்னதாகவே யுணர்ந்து, நம் மன்னர்க்கு ஆட்போக்கிவிட்டு, நமது படையுடன் போருக்கு ஆயத்தமாகி முள்ளூரை நோக்கினர். முள்ளூர் எல்லையை மிதிக்குமுன், நம் திருமுடிக்காரி வேந்தரும் தமது வீறுபெற்ற காரியின்மீது இவர்ந்து ஆண்டுச் சென்ற யாவர்க்குங் காட்சியளித்தனர். பின்பு என்ன தான் நடந்திருக்கும்? நீயே உணரலாமே.

**நாகன்:**—நீவிர் கூறிமுடித்த இவையாவும் யான் நன்கு அறிவேன் யான் தங்களிடம் விரும்பியது போர்நிகழ்ச்சியே யன்றி இவை யாவுமன்று.

**வேற்படைஞன் மாரி:**-போர் நிகழ்ச்சியா வேண்டும்? கேட்பாயாக. வேந்தர் பெருமானைக் கண்டோமோ இல்லையோ, எங்கட்கு ஏற்பட்ட ஊக்கத்துக்கு அளவேயில்லை. ஆயிர மடங்கு மிக்க வலியவராயினேம். எங்களைப் பற்றிநின்ற நெடுந்தொலைவு நடந்ததாலேற்பட்ட களைப்பும் சென்றவிடம் அறியோம். போர்ப்பறை எழவே யாங்கள் யாவரும் வீறுற்று நின்றேம். பகல் பதினைந்து நாழிகை இருக்கும்; நமது படைகள் பகைஞரோடு கை கலந்தன. ஆரியன்படை நம்மினும் ஐந்து மடங்கு எண்ணாற் பெரியது; வலிமையும் கொடுமையுங் கலந்த வாள்வீரர் பன்னூற்றுவராக ஆண்டு நின்றனர்; எனினும், திறனின்றித்

தக்க முறையின்றி அவர்கள் நம்மீது பாய்ந்தமையால் எளிதிற் புண்பட்டு வீழ்ந்தனர். பகைவருட் பெரும்பாலர், வேங்கை முன் வீழ்ந்த கடமாவென்ன, நம்மவர் முன்னே ஆற்ருது உயிரற்று மாண்டனர். அறிந்தான் ஆரியன்; தனது அறியாமைக்கு நாணினன்; நம்பால் அச்சமிக்குடையாணுகி எஞ்சியவருடன் புறமுதுகிட்டோடினன். இந்நிகழ்ச்சிகள்யாவும் பிற்பகல் இருபத்தேழு நாழிகைக்குள் நிறைவேறின. பின்னர், விண் முகடுவதிர வெற்றி முரசொலியும், வீரர்தம் ஆர்ப்பும், வெள்வளை யோசையும் நிரம்பியொலிக்க நம் திருமுடிக்காரிவள்ளல் வெற்றி வாகை சூடி மகிழ்வுற்ருர். இவைதாம் அன்று நிகழ்வுற்றன. (திடுக்கிட்டு) ஏடா, நாக! நீ வந்த அலுவலை மேற்கொள்ளாது என்னென்னவோ, போன செயல்களைப் பற்றியெல்லாம் இருக்கின்ருயே. ஆமாம், எற்றிற்கு என்னை நம் தலைவர் அழைத்தார்? அச்செய்தியை இதுகாறும் சொல்லவில்லையே, நீ.

**நாகன்**:--நல்லவேளை, இப்பொழுதாவது நினைவு வந்ததே, அதனைக் கூறுமுன்னர்தான் இத்துணைப் பேச்சுக்களும் எழுந்தன. என்னவோ, ஏதோ என அஞ்சற்க; உங்களுக்கு ஒரு பெரிய பேறு வரப் போகிறது.

**வேறபடைஞன் மாரி**:--என்னடா, ஒரே அடியில் அளக்கின்ருய். நீ நல்ல தோழன்; புகழ்ந்தது போதும்; ஐயா ஏன், என்னை விரும்பினர்.

**நாகன்**:--ஐயோ! ஏனண்ணு, நான் உங்களிடம் பொய் கூறுவேனே? நம்மன்னர் பெருமான், நாளை மறுநாள், நமது நகரப் பொதுநலத் தலைவர்கள், பெரும் படைத் தலைவர்கள், பேரறிவாளர்கள், திருவமர்

செல்வர்கள் ஆய பல பெருங்குடிமக்கள் சூழவிருந்து, இதுகாறும் போரிற் பெரும் பணியாற்றிய தங்கள் போன்ற தொண்டர்கட்கு, நம்நாட்டார் சார்பில் தமது மகிழ்ச்சி கலந்த நன்றிக்குற்ற அறிகுறியாக, வெற்றிமாலையும், வீரக்கழலும், கொற்றவாளும், கோநிகர் தகுதியும், பட்டமும் நல்கத் திருவுளங் கொண்டருளினமையால், அதற்காவனவும் நிகழ்கின் றன. அது பற்றியே நம் தலைவரவர்கள் இன்னே, உங் களை அழைத்தமையாகும்.

**வேற்படைஞன் மாரி**:--ஓஹோ! இதனைக் குறிப் பிடாது நீ மொழிந்தமையால் என்னென்னவோ வெல்லாம் எண்ணினேன். அதனாற்றான், மறுபடியும் எங்கே நமக்குத் தொல்லைகள் வருமோ வென ஐயுற்றே, யான் அவ்வாறு வெறுத்துப் புலம்பினேன். எனக்கு இன்று ஊரிலென்ன அலுவல். வீண் பொழுது கழிப்பவன் தானே. இன்னும் எத்துணை நாட்கள் வேண்டுமாயினும் இருந்துவிட்டுச் செல்லு கிறேன். நேரமாயிற்று. நாகா, விரைந்து வருக, செல்லலாம்.

**நாகன்**:--அடேயப்பா! பெரிய ஆள்தானண்ணு தாங்களும். "குதிரை,, 'கொள்' என்றால் வாயைத் திறக்கும். 'கடிவாளம்' என்றால் பல்லைக் கடிக்கும்' என்ற பழமொழிக்கு உற்ற ஒருவரை இன்றுதான் நானும் கண்டேன். நன்று நன்று, மிகமிக நன்று.

**வேற்படைஞன் மாரி**:--போடா, போக்கிலி. என் நிலையில் நீ இருந்தால், இன்னும் என்னைவிடப் பல பேசுவாய்; இப்பொழுது எமது துன்பம் உனக்கு எவ் வாறு தெரியும். நன்று, செல்வோம், வருக! (இருவ ரும் மகிழ்வுடன் மறைதல்).

காட்சி முடிவு

## இயல் உ—காட்சி உ.

உறுப்பினர் :—மலையமான்; கபிலர்; மாறோக்கத்து நப்பசலையார்; காவலன்.

இடம் :—முள்ளூர் மலைக்கோயில்.

பொழுது :—மாலைப்போது.

[மலையமான், கபிலருடன் மலைவளங்கண்டு மகிழும்போது மாறோக்கத்து நப்பசலையார் பரிசில் நாடி அவனைக் காணல்]

**மலையமான்** :—புலனழுக்கற்ற அந்தணாளா! இயற்கையோடியைந்த இன்பத்தினுமிக்க மற்றொன்று இவ்வுலகினி லுண்டோ? ஆண்டுக்காண்மின்! 'எம்மினுஞ் சிறந்தா ரிலரெனிலர்' என இறுமாந்து மொழிவன போல, தம் அழகிய தோகைகளை விரித்து, களிப்புடன் அம்மயில்கள் ஆடுகின்றன. அவற்றின் ஆடற்கேற்பச் செவ்வழிப்பண்ணைச் சீர்பெற எடுத்து மொய்வரி வண்டுகள் முரல்வன கேண்மின்! கிள்ளையுங் குயிலும் செம்போத்தும் நாகணமும் செவிக்கினிதாமாறு எழுப்பு மிவ்வொலித்திரள் அவ் ஆடு மயில்கள்பால் அகக்களிப்புறுவன போலன்றோ வுளது.

பெரும! ஒருவன் எத்தகைச் செயற்கை யின்பம் நுகரினும் இறையொளிவீசும் இவ்வியற்கையின் ஓரணுவிற்கு அவை ஈடாகா. இவ்வேனிற் கொடுமையைத் தணிப்ப, யாம் எத்துணைச் சார்புகளமைத்தும், அவை யாவும் ஈண்டு மென்மெலவசைந்து நறுமணம் விரவ இயலொலி செய்து வருகின்ற இம்மெல்லிய பூங்காற்றுக்கு நேராகா; மற்றும், சிலுசிலுத்தோடும் அருவியின் காட்சியும்-சினையிடை மறைந்து மகிழ்வுறக்கத்தும் சிறுகுருகுகளின் ஆர்ப்பும்-வான்

பரப்பும் சுருங்க நாண்மலர் விரித்த நன்மணமும்-ஓரிடைத் திகழ்தலால், உள்ளமும் உணர்வும் ஒன்று பட்டு, ஒரு தனிப் பொருளின் அருணலம் பெறுதற்கு ஏற்றவாறு என்பால் தோன்றுமோர் இன்னிலைப் பேற்றினை, என்னென்பேன்! பெரும, யாவும் தங்களது வருகையாலன்றே இன்று எற்குக் கிட்டின.

**கபிலர்** :—உயிர்க் குறுதியின்றெனினும் உண்மை நெறி வழுவாத உரவோய்! வளர்க நின் கொற்றம்! எனது வருகை ஒருவாறு நின்பால் இன்பம் விளைக்கலாம்; எனினும், நின் போன்றவரது கூட்டுறவின்றி இவ்வுலகவாழ்வினை எம்மனோர் என்றும் பெறார். மற்றும், எம்போன்றார்க்கு நின்னையன்றி வேறு துணை யேது? வள்ளால்! ஈண்டு அணிசெய்து விளங்கும் இவ்வியற்கைத் தோற்றத்தை நோக்குதி. யாவும் இறைவனின் இன்செயல்; அற்றன்று, அவனது திருவடிவம். இவ்வடிவினை உளம்பற்றி நின்று களிப்பதே அவற்குரிய, வழிபாடு. எவ்வகைச் செயற்கை யழகும் இவ்வியற்கையின் அடித்தூசுக்கு இணையுடைத்தன்று. மேலும், நிமிர்ந்தும் வளைந்தும், சரிந்துங் குவிந்தும், தனித்துந் தொகுத்தும் நமக்குக் காட்சி தரூஉம் இவ்வரைகளினிடத்து, எம்மருங்குங் காணுதற்குற்ற பச்சைக் கலிங்கமிட்டாற்போலப் பசுந்தழை மலியப் பாவிச் செழித்த செடிகளும், நெருங்கப்பிணைந்து வளனுறப் படர்ந்து மணமலர் பொருந்தித் தென்றலால் துவளும் கொழுவிய பூங்கொடிகளும், வானகடு பிளக்க வளம்பட வோங்கித் தேனடை செறியத் திகழும் நெடுமரங்களும், பழுத்த பலாவின் பழுத்த சுளைகளை வாய்மடுத்து அதன் கொட்டைகளை வீசியெறிந்து மரக் கொம்புகளில்

தாவியோடி விளையாட்டயரும் மந்தியுங் கடுவனும் தந்துள இவ்வின்பவுணர்ச்சியும், நாம் பெரிதும் முயன்று அமைக்கும் செயற்கைத் தோற்றத்தில் காணலாகுமோ? ஆதலின், மலைய! இயற்கையோ டியைந்த இன்பமே இறையின்ப மாவதறிக.

**மலையமான்** :—பொய்யா நாவிற் புலவ! தங்களது பொருளுரைக் கேற்ப எனது வாழ்க்கை யமைய இறையருள் புரிக. எனினும் அஃது என்பால் முயற் கோடாகுமோ வென ஐயுறுகின்றேன்; ஏனெனின், இயற்கை நங்கை தன் எழினடங்கண்டு தெவிட்டா வின்பத்துள் திளைத்தற்குற்ற பேறு, யான் இப்பிறப் பிற் பெறேனெனுந் துணிபுடையேன். இறைமையி லீடுபட்ட நாள் முதலாக இத்தமிழகத்தில் போரும் பூசலுந் தலையெடுத்து நின்று, எம்மனோர் நினைவை என்றுந் தம்பாலீர்த்துள்ளமையான், என்போன்றார் ஓரிடையிருந்து இன்பந்துய்த்தல் எவ்வாறு இயலும்? இருப்பினும், இனி யான், போர் நினைவைச் சுருக்கி, மன்பதைக்குற்ற நலன்களை மிகுக்கு மனமுடைய னாவேன். தங்களை ஒத்த சான்றோர்கள் என்பா லிரக் கங்காட்டி உடன்வாழ உளங் கொண்டால் எதனை யும் யான் எளிதினிற் பெறுவேன் என்பது திண்ணம்.

**கபிலர்** :—நன்று தலைவ! குடிநலன் காக்கு நின் கொற்ற மோங்குக! மலைய, யான் ஓர் அந்தணன்; மற்றும் புலவன். என் அனையர் பலநாடுகள் சென்று செங்கோலோச்சும் நின்போன்றாரது பெறுதற்கரிய மாண்புகள் யாவும் ஞாலமுணர நல்லிசைப் பாக் களால் நவின்றும் ஊழ்வலியுடைமையா லுற்றதம் ஆட்சி ஆழ்துயர் மூழ்க அறவினை தவிர்ந்து தன்னலம்

பேணும் தசைபொதி சுமந்த கோனிலையறியாக் கொடுங்கோலவர்க்கு இனிய நன்மொழிகளை இடித்துக் கூறியும் நாட்டின் தீங்கினை யோட்டியும் பல படப் பணிகள் புரிபவராதலால், நிலையாக ஓரிடத் திருக்க எவ்வாறுருகுமெனக் கவல்கின்றேன்.

**மலையமான்:**—நல்லிசைக் கலைஞ! பொறுத்தருள்க. இத் தமிழகமாகு முடலினது இனிய வுயிர்போன்ற தாங்கள் இந் நாட்டின் பாற் கொண்டுள்ள பொறுப்பினை யுணர்ந்தும் தன்னல மீக்கூற, இவை மொழிந்தேன். தங்கள் திருவுளப்படியே யாண்டுஞ் சென்று வருக. எனினும், இந்நாட்டின்மீது மிகுந்த பற்றுக் கொண்டு, பலகால் இவண் போந்து, இனிதிருக்க வேண்டும் என்ற எண்ணம் என்பாற் றோன்று கின்றது. தங்கள் கருத்து யாதோ அறிகிலேன்.

**கபிலர்:**- கலைஞ ருளக்கோயி லமர் காரி! நின் கருத்துப்படியே ஆகுக. மற்றும் இதுபோது, யான் மொழிவன செவி மடுக்க. நின் நிகர்ப் பெருந்தகையோர் பல்லாண்டுகட்கொரு முறையே இந்நிலமீது வருகின்றனர்; இஃதுண்மை; வெறும் புகழ்ச்சியன்று மற்றும், குறுநிலக்காவலர்கள் பலரும் இத்தமிழகத்தே நிரம்பிக்கிடக்க, அவர் எவரானுங் கருதவியலா 'ஓர் உயரிய மணிமுடி' நின்னையன்றோ பரிசாகச் சார்ந்தது. நடுவூர் மரம் பழுத்தால் என்ன நீ இருத்தலால், நாளும், பாணருங் கூத்தரும் புலவரும் இரவலரும் நின்னைப் புகழ்ந்து நாடி வருவதை யுணராதவர் யாவர்? ஆதலால் மலைய, நின்பாற் கூறுவதொன்றுண்டு. அஃதாவது, "ஒரு திசையினிலுள்ள கொடை வள்ளலாகும் ஒருவனையெண்ணி, நான்கு திசைகளினுமுள்ள பல வேறு வகையினராய இரவ

லர்கள் நாளும் வருவர். அவ்வாறு வருபவர்களது திறனறிந்து வரிசைப்படுத்துவதென்றால் அது மிகவும் அரிதாகும். எனினும், அவர்கட்குத் தருதல் மிக எளிது. ஆதலால், நீ இதனை நன்குணர்ந்தாயாயின், நின்னைப் புகழ்ந்து வரும் புலவர்கள் யாவரிடத்தும், ஒரே மனப்பாங்கு கொள்ளாது அவரவர் தகுதிக்கேற்ப நின்கொடையமையுமாக" என்பதேயாம்.

**மலையமான்** :—வெறுத்த கேள்வி விளங்கு புகழ்ப் பெரும! எமக்குற்ற துணையாகும் தங்களது உளத்துற்ற செம்மொழிக்கு மாறாக, புதுவதாக இன்று சில புகலத் துணிந்தமைக்குப் பொறுத்தருள்க. பெரும! தங்களுயிர்த்தோழன் மாரிவண் பாரி, சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கியதும் முடமோசியார் பாடிய ஆய் அண்டிரன், நாகம் நல்கிய நீலக்கலிங்கம் ஆலமர் செல்வற் களித்ததும், மாரிநாள் நடுங்குமென மயிற்பறவைக்கு, பரணர் புகழ்ந்த பேகன் பட்டாடை தந்ததும், மற்றுமிவையன்ன பெருஞ் செயல்களும் தகுதி ஆய்ந்து கொடுத்தவையோ! இன்றுளார் நாளைக்கிலர் எனும் பீடுபெற்ற இம்மாநிலத்தே, ஈகை யுளங்கொண்டபோது பெரியவர், சிறியவர்: தக்கார், தகாதார்: மேலோர், கீழோர்; எனும் பாகுபாடின்றிக் கொடுத்தலே சாலும் எனுங் கொள்கையினன் யான் ஆதலின், எனது கொடை எவர்க்கும் ஒரே படித்தாயுளது. எனவே, கலைஞ, எனது கருத்துணர்ந்த தாங்கள் என்பாற் குறைதவிர்ந்து அருளுவீராக!

**கபிலர்** :—மாவண் தோன்றல்! மல்குக நின் கொடைவளம். நின் நினைவுப்படியே யாவும் நிகழ்வனவாக. "நினது நாடு, மலைநிலங்கொண்டமையான்

கடலாற் கொள்ளவும் பகைவராற் கருதவும் படா தது. எனினும், அழலோம்பும் அந்தணர்க்கு உரியது. குறையாத செல்வமும் வென்றிமிக்க போர்ப்படையுங் கொண்ட மூவேந்தருள் ஒருவன், நீ அவனுக்கே படைத்துணையாக இருக்க வேண்டுமென அவனது ஆள் வழியே நின்னைப் புகழ்ந்து பெரும் பொருள் தருகின்றான். அவனையொப்ப மற்ற இருவரும் தங்கட்கே துணையாமாறு தனித்தனி புகழ்ந்து நீ மகிழ்வாயெனப் பெரும்பொருள் தருகின்றனர். இம்மூவர் தரும் பொருளும் நின்குடியை வாழ்த்திவரும் பரிசிலர்க்கே உரியது. ஆதலால் அருந்ததியொத்த கற்பும்மென்மை நன்மொழியும் பெற்ற அரிவையாகிய நின்மனைவியின் அழகிய தோள்களன்றி நினக்குரியதென்று ஒன்றும் இன்று. எனினும் மிக்க பெருமிதத்தோடு நீ வாழ்கின்றாய்; வீரக் கழல்புனைந்த அழகிய செம்மையான அடிகள் பெற்ற காரி! இதன் காரணம் எவரானும் காணலாகுமோ?" வள்ளால், நின்கொடைச் சிறப்பால் அறக் கடவுளும் தன் அகந்தை கெடுவன் என்பது திண்ணம்.

**மலையமான்** :—மறைமொழிப் பெரும! என்பாற் கொண்ட தங்களது பேரன்பே இவை மொழிந்தது. அவ்வாறே யான் வாழ்வதற்கு ஐயன் அருளுக. யாம் இனி இருக்கை செல்வோம் (திரும்புதல், நோக்குதல்) அருட்பெரும! ஆண்டுக் காண்க! ஒரு நங்கை; நம்மையன்றோ நாடிவருகின்றனர்...ஓ! மாறோக்கத்து நப்பசலைப் பெருமாட்டியார்......(புலவர் பெருமாட்டி, கூப்பிய கையினராய் அணுகுதல்) வருக அன்னையே! வந்தருள்க!!

**மாரோக்கத்து நப்பசலையார்** :—'பகைவர் யானையின் நெற்றிப் பட்டத்துப் பொன்னால் வாடாத தாமரை செய்து பாணர் முடிமீது அழகுறச் சூட்டிய உயர் சிறப்பும் நீங்காவலிமையும் பெற்ற விறலோன் மருக! இராப்பொழுது, தான் ஓரிடத்தே உறங்கிக் கிடத்தல் போன்ற இருள் நிறைந்த சிறுகாடும், பறை யோசை செய்யும் அருவியும் பெற்ற முள்ளூர்மன்ன!! முட்பல் பெற்ற பாம்பை வீசியெறியும் இடிபோல முரசு அதிர்ந்து முழங்க, நல்லிணக்கமில்லாப் பகைஞரை அவர்தம் முதன்மை யானையொடு முடியரசுங் கவிழ அருஞ்சமரில் தாக்கித் தடுக்கும் பெண்ணையாற்றுப் பக்கமுள்ள வளநாட்டுத் தலைவ!!!' வணக்கம். (கை கூப்புதல்).

**மலையமான்** :—(தொழுங்கையுடன்) அன்னையே! இவண் தாங்கள் கருதினமையை நன்குணரேன். எனினும், தங்கள் போன்றாரது நலமேம்பாட்டிற்கே எனது செல்வம் உரித்து என்பதனை மறவேன்.

**மாரோ-பசலையார்** :—வாழிய பெரும! 'ஒரு பொருளைக் கற்று வல்லவராயினும் அல்லாதவராயினும் விரைவில் நின்பாலணுகிப் புகழ்ப் பேசுவோம் என்றால், அழிக்கலாகா இயல்புள்ள நின் சுற்றத் தோடு விளங்க, ஞாலத்து மிகுந்த மக்களனைவரினும் குற்ற நீங்கிய புலமை மிகு அந்தணன்-கபிலர் பெருமான், பரிசில் நாடிச் செலும்பாவலர்க்கு, இனிப்புகழ இடமின்றி, நின் இசை யாண்டும் பரவி நிற்கப் பாடினன் ஆதலால், சினமிகுபடை பெற்ற சேரன், மேற் கடற் கண் பொன்தரூஉம் கப்பல் ஓட்டிய அவ்வழியே பிறகலங்கள் செல்கலாதனபோல யாமும் உள்ளேம். எனினும் வறுமை நோய் எம்மைத் துரத்தவே, நின்

பால் புகழ்பாட வந்து நின் கொடைச் சிறப்புள் ஒரு சில யாங்கள் புனைந்தோம்' வல்லாள! எளியேமை யேற்றருள்க.

**மலையமான்** :—இயன்மொழி நவிலும் என் அன்ருய்! இனி நல்குரவு தங்களை நாடாதொழிக. நெடிது நடந்தமையால் தங்கள் மேனி பொலிவிழந்து சோர்வுற்றுளது. இத்தேர்மீது முன்னதாகச் சென்று களைப்பினைப் போக்குக; யாமும் விரைவில் வருகின்றேம். [காவலனை நோக்கி] ஏடா! காவல, இப்பெருமாட்டியை நம் தேவியர்முன் அழைத்தேகுக. பிராட்டி, நீராடி நல்லுடையணிந்து, உணவு கொண்டதும் நம் மன்னவைக்கு அழைத்து வருக. மற்றும், நம் அமைச்சரிடம் 'பொன்நெடுந்தேரிலும், புகர்முகக் களிறும், அணிகிளர்தேரும் ஆடகப்பசும் பொன்னும் நப்பசலையார் பரிசுக்காக இன்னே அமைக்க' எனும் எம் திருவாய்மொழியினை இயம்புக.

**காவலன்** :—(வணங்கி-ஒடுங்கி) தங்களாணைப்படியே, பெரும! (செல்லுதல்.)

நப்பசலையார் வணங்கிச்செல்ல, மலையனும் கபிலரும் மகிழ்வுற நோக்குதல்.

காட்சி முடிவு.



## இயல் ௨—காட்சி ௩

**உறுப்பினர் :—விறலி; பாணன்; கபிலர்**

இடம் ;—காட்டிடைவழி

பொழுது ;—நண்பகல்

[பரிசுநாடும் பாணனிடம் கபிலர் மலையனின் கொடைவளங் கூறல்]

**விறலி :**—எனக்கினிய! காரிவேந்தர் எவரும் பெருத பேற்றை இவ்வையகத்தே யடைந்திருப் பினும் அதற்குரிய துணையா யமைந்தது இப் பெண்ணையாற்றின் பெருவளமேயன்றே? இவ்வளன் சுருங்கின் அவர்தம் கொடை என்னும்?

திங்கட் குடையான் செங்கோலான் செவ்வி திருக்கோ
[வன் மலையான்
செங்கட் செருநர் உழுநர்மணி முழவும் விழவு மதகுடைநீர்
தங்கும் ஓதை சிறந்தார்ப்பத் தவழ்ந்தீங் கொழுகுந்
[தமிழ்ப்பெண்ணை
இங்கும் நல்கா தாயிடினும் இரவோர்க் கில்லை யென்
பானே?

**பாணன் :—**

இல்லை யென்ப தறிகில்லான் இம்மை யம்மை யெம்மை
[யினும்
இல்லை யென்று சொல்லுமவன் ஏதிலார்பால் அவர்வெற்றி
இல்லையில்லை யென்ஞான்றும் இவனைப் பணிவார்க்
[கின்னல்தான்
இல்லை யெங்கண் மலையற்கே யீடிங் கெவரு மில்லையே.

நல்லாய்! உலகம் வரினும் வழங்கக் குறைபடாக் கொடை நலம் பெற்றவரன்றே எம்காரி. எத்தகைய நிலைவரினும் எம்மண்ணலார் பரிசிலர்க்கு இல்லை யென்பதறியார்.

**விறலி** :—என் தோழ! இனி எவ்வளவு நாழிகைத் தொலைவு யாம் நடக்கவேண்டும்? வேனிற்கொடுமை மிகுகின்றது; உடல் நலியத் தலைப்படுகின்றது; கால்களும் சிறிது தள்ளாடுகின்றன. என்றாலும் மலைய மன்னர்மேற் கொண்டுள்ள எனது அவா, இத்துணையும் பொருட்படுத்தாதுளது. வாழிய, அவன் திருஆட்சி!

**பாணன்** :—அன்புடையாய்! நிற்குற்ற களைப்பு நீங்க இவண் சிறிது தங்கிச் செல்வோம். இற்றைய மாலைக்குள் யாம் வள்ளல் காரியைக் காணுதல் கூடும், உளப்தளரற்க [விறலியுடனமர்தல்] தோழி! நம் வேந்தர் திருமுன்னர் இசைத் தற்குற்ற பண்களை ஈண்டு ஒருமுறை பாடித் தெளிவுறுவோமாயின் நன்றாம்.

**விறலி** :—அவ்வாறே ஆகுக, பாண!

பண்

*திருவளரணிவாயில் திணிமதில் நிகழ்கொடி மாடமல்கும்*
*செருவில்சீர்ப்பறையொலி முரசொலிசிலம்பொலி*
*[முழங்கவைகும்*
*மருமலர்ப்பொழில்மன்னு மணிமுத்துப்பெண்ணைசேர்*
*[மலையன் கோவில்*
*இருநிலமடந்தைதன் திருநுதலணிதருந் திலகமன்றே.*

பண்

*நீருண்ட மாமழையே! நிலவுதரும் வெண்டிங்காள்;*
*சீருண்ட பொதிகைமணம் சேர்ந்தூரும் தமிழ்த்தென்றால்!*
*கூருண்ட வேல்மலையன் கொடைமடங்கைக் கொண்டமை*
*[போல்*
*யாருண்டிவ் வுலகமதி லெமக்குணர்த்த வல்லீரோ?*

பண்

பூவன் முகுந்தன் பேயன் போன்றிங்
காவன் அறிவால் அழகால் திறனால்
மூவர் புகழ முளைத்தா னன்னான்
மாவண் காரி மற்றோ னிலனே.

பண்

யாழையிடமாத்தழுவி யாண்டுநலங் கூடவிசை பாடு [முறையேம்
ஏழைசிறுபாணர்தம தேவன்மகட் கூத்துவக்கு மெளிதீ [தென்னோ
மாழைநெடுந்தேர்களிரு டேனைநிதி சேரவருண் மாரி [மலையன்
வாழையிளநீர்கமுகு சூழ்பழனக் கோவனகர் வாழ் [வானம்மா

**பாணன்:**—(புடைநோக்கித் திடுக்கிட்டெழுந்து) பொய் நெறியறியாப் புலவர்பெரும! எம்பால் தாங்களுறைதலையை யறிந்திலேம், பொறுத்தருள்க. விறலி! இப்பெருமான், நாம் நாடிச்செல்லும் திருக்கோவலூரின் மலையமான் திருமுடிக்காரி மன்னரது அன்பிற்குரிய கபிலர் பெருமானாகும்.

**விறலி:**—(அடிவணங்கி எழுந்து) மறைத்திருவாள! எனது கண்குளிரத் தங்கள் திருமேனியைக் கண்டு களித்தற்குற்ற இந்நாள் எனக்குற்ற ஒரு பொன்னாளாகும். பெரும! தங்களது அருணோக்கம் எங்கள்பா லமைவதாகுக.

**கபிலர்:**—இசைத்தமிழ் மக்காள்! நீவிர் சிறிது முன் இசைத்த இனிய பண்களாலீர்ப்புண்டு இவண் போந்து மகிழ்வெய்தினேன். உங்களது இசைநலந் தழுவிய பண் மலையன்காரியை மகிழ்வூட்டும்; உங்க

ளும்பொருந்த வேண்டுவன தருவன். மேலும், அவன் எவரும் பெறாத கொடைச்சிறப்புடையான்; ஆதலால், நன்னாளல்லாது போகியும் வழியிடையில் பறவைகளால் தீநிமித்தந் தோன்றித் தடுப்பவும் ஏற்றபொழுதல்லாதிருந்தும் வலியச்சென்று நலனீங்கிய மொழிகளைச் சொல்லியும் இவற்றால் உளமுடையாது, காரியை யணுகி, முறைபெற்ற இசையோடொலிக்கும் அருவியுள்ள பெருமைமிக்க மலையுடைய அவனைப்புகழ்ந்து பாடுவாராயின், எவரும் பரிசு பெறாது, வறிதே மீள்வாரல்லர்." இவன் போன்றாரை இவ்வுலகில் எங்கணுங்காண்பதரிது.

**பாணன்:**—அருண்மொழி அந்தண! தங்கண் மொழிகளால் என்தோழி ஐயம் நீங்கினள். யாண்டும் இம்மலையனின் கொடைவளத்தைக் குறிக்குங்கால், 'கருவில் திருவாகப் பெற்றுளான்' என மொழிகின்றனர். அதற்குச் சான்றாகத் தங்களது திருமொழியும் வந்தது.

**கபிலர்:**—யாழ் தழூஉம் பாண! இவ்வையத்துறையும் ஏனைப்புரவலர்க்கும் எம்மலையற்கும் கொடைமுறையால் வேறுபாடுண்டு. அஃதாவது, "அன்று சேமித்த இனிய மதுவுண்டு நாண்மங்கலப் பெருமகிழ்வால் களிப்புறுங்கால் எவர்க்கும் தேர்க்கொடை வழங்குதல் எளிது. அவ்வாறு களிப்புறாதபோது, அழியாப்புகழால் விளங்கும் மலையன், பரிசிலர்க்கு நல்கிய அணிகளால் மிளிரும் உயர்ந்த தேர்கள், பயன்மிக்க முள்ளூர் மலைமேலுண்டாய மழைத்துளியினும் பலவாயின." எனவே, எம் காரிமன்னன் என்றும் எந்நிலையினும் ஈவதே கடனாக் கொண்டவனாதலால் அவன்

வள்ளன்மை ஏனையரதுபோல செயற்கையுட்படாது இயற்கைநிலை பெற்றதாகும்.

**பாணன்:**—கல்விக்காவல! தங்களது அன்புக்கு யாங்கள் என்ன கைம்மாறு செய்யவல்லேம். பரிசு நாடிய எமக்கு இனிய நல்லாறுகள் பல நவின்ற தங்களது இணையடி மலர்களை எமது நெஞ்சத்துட்பதித்து மகிழ்வதன்றிப் பிறிதொன்று மறிகிலேம். வாழ்க பெரியோய்! வாழ்க நின் அருண்முறை.

**கபிலர்:**—நல்லிசைச் செல்வர்காள்' மலையன்காரிபாற் சென்று இறைவனருளால் இன்பமெய்துக. பொழுது நீங்குமுன் கோவலூர் அடையலாகும். மகிழ்வுடன் சென்றுவருக. நான் போய்வருகிறேன், (இருவரும் தொழ — கபிலர் கைகளை உயர்த்தி வாழ்த்துதல்.)

காட்சி முடிவு,

---

## இயல் ந—காட்சி க.

உறுப்பினர்:—அதியமான் நெடுமானஞ்சி; அணிமுதல்வன் கருணாகரத்தேவன்; புலவர்-பொன்முடியார்

இடம்:—தகடூர் அதியன் கோயில்

பொழுது:—முற்பகல்

[மலையமான் காரியை வெல்ல அதியமான் அஞ்சி உளங்கொள்ளல்]

**அதியமான்:**—கருணாகர! என்னே, அவன்றன் இறுமாப்பு? நீரளவே ஒரு குளத்தின் ஆம்பல் அமைகிறது. நறுந்தேன் பெய்து வளர்த்தாலும் கைப்பினின்றும் பேய்ச்சுரை மாறுவதின்று. புன்புலாலைப்

புறம் பொருந்து மூடினும் தன் தோற்றத்தால் தொலைவினர்க்கு அது துன்பந்தராதிருப்பதில்லை. மழவர் படைஞ! அவனைப்பற்றியநின் குறிப்பியாது?

**கருணாகரன்:**—பெரும! என்கருத்து தங்கட்கு மாறுயதன்று. தங்களாணை வழிப் படிந்து நிற்பதுவே அமைதாம். ஒற்றன் ஒளிமுத்தன் வழியே முள்ளூர் மலையனின் திறன்கள் யாவும் தெரிந்துள்ளேன். சோழன் இராசசூயம் வேட்டஞான்று தனக்குப் படைத்துணையானமைக்காகத் தந்த திருமுடிப்பரிசும், பிற இரு மன்னவரால் வழங்கப்பெற்ற கொடைச்செல்வங்களும் அவன்றன் நிலைமையைத தடுமாறச் செய்கின்றன. போர்த்திறனில்லா மூவர் மயங்கப்பொரு வலி பெற்றமையால், தன்னிகர் எவருமிலர் என இறுமாந்துமுள்ளான்.

**அதியமான்:**—(சினந்து விழித்து) அறிந்தேன்! அறிந்தேன்!! தம் முன்னோர் திறனில் ஒருதினையளவும் பெறாத அம் மூவர் பால் பெற்ற பரிசு, இவ்வையகமே முனைந்துவரினும் அதனை முறித்து வாகைசூடும் வலிமைபெற்ற வீரருள் வீரர் யாவரையும் இகழ்வுபடுத்துமோ? தனக்கு நிகர் எவருமிலரென இகழ்ந்துரைக்கவோ அப்பரிசு வந்தது? நன்று, அவன் சிறுமதி! உண்மை வீரன்: வெற்றியே என்றுங் காண்பவன்: தன் போன்றோரைப் போரிற் புறமுதுகிட்டாலன்றி 'நிகரற்றவன்' என மொழியக்கூசுவன். (மேனோக்கி) 'அறிவிலீ! என்னைப் பகைத்துள்ள நின்னா, 'நிகரற்றவன்' என எவ்வாறு கூறத் துணிந்தது? நின் இறுமாப்பை அதியன் கடிதிற் போக்குவன்; மழவர் படையன் மாண்புணர்ந்த பின்னன்றே நின் மடமைநீங்கும்.' (புறம்நோக்கி) கருணாகர! கோவனகர்

முற்றுகைக்குத் திட்டம் செய்க! முளையிற்களை யாவிடில் முற்றியபின் கோடரி கொண்டு முறிக்க நேரிடும். விரைவில் ஆவன அமைத்து, விளம்புக.

**கருணாகரன்:** அவ்வாறே அமைக்கின்றேன். பெரும! திட்டம் செய்தபின் ஆட்போக்குவேன், வணக்கம்! சென்று வருகின்றேன் (பணிந்து நீங்குதல்)

**பொன்முடியார்:**—எழில்மலி பொழிலிடைக் குயில் மிகப்பயிலும் தகடூர் வேந்தே! இத்தமிழகத்தே இன்று நின்னைப் போரில் வெல்லுவார் எவரும் இலர் என்பதும், நின்னையொத்த பிற தகுதிகளான் மேம்பட்டார் பிறரிலர் என்பதும் எவருமறிந்த செய்தியே. எனினும், மூவேந்தர்கள் மகிழ்ந்து மலையனைச் சிறப்பித்தமை, நின்மீதுற்ற அழுக்காற்றினாலன்று: அவன் பாற்கொண்ட அன்பினாலேயாம். இவ்வாறிருக்க, நாவடக்கமின்றி நின்பாலிழுக்குத் தோன்ற அம்மலையமான் கூறினனாயின் அஃது எவரானும் வெறுக்கத்தக்கதே. மற்றும், நீயோ, முன்வைத்த காலைப் பின்னிடக் கூசுவாய் என்பதும், நாளும் கோளும் நன்னிமித்தமும் பொருத்தமின்றியிருப்பினும் ஆன்றோர் நின்பாலணுகி, 'நின் வெற்றி ஐயுறுமாறுளது, செல்லற்க' எனக் கூறித் தடுப்பினும் அவற்றிற்கு மாறாக, நீ போர் முகத்து நின்று மாற்றலரைக் கூற்றுவற்காக்கி, வெற்றிவாகை சூடுகின்றாய் என்றவுண்மையை யாமறிவேமாதலால், நீ, மலையன் பாற்கொண்டுள்ள சீற்றத்தை எம்மனோரால் தணித்தற்காகுமோ?

**அதியமான்:**—பொன்மொழிப் புலவ! என் நெஞ்சு அவாவும் போர்ச்செயலை வெறுக்கின்றீர்கள்

போலும்? எனினும் எனது சிறுமொழிக்குச் சிறிது செவி கொடுக்கவேண்டும். பெரும! தற்பெருமை ஒன்றையே பேசுபவன்பால் என் உள்ளம் செல்லாது: அவனை யிகழவுஞ்செய்யாது; ஆனால், நண்டுகொழுத்தால் வளையிலிருக்க நாடாததுபோல, நாவடக்கமின்றிப் புனைமொழி புகல்வானது இறுமாப்பை எவ்வாற்றானும் ஒழிக்கவே முந்துறும். நாகாவார் சொல்லிழுக்குற்றுச் சோகாப்பர் எனப் பொய்யாமொழி நவில்கின்றதே. என்போன்றார். 'அஃதெனக்கின்று' என இன்று கூறினால், பகைக்கும் போர்க்கும் அஞ்சி அமைதி வாழ்வு நாடும் வலியிலார்நிலை நாளை யாதாகும்? நாட்டினது பொதுநலம் பேணு முறையிலாவது கயவரை ஒறுத்தல் என்போன்றாரின் கடனாகுமே. பொருள், கலை, உயிர், அழிவு எனக் கூறி வாய்ப் பறையிடுதல் மழவர் மரபிற் கேற்றதன்று மற்றும் என்னை மதியிலன், ஆண்மை கெட்டவன். தன்னலக் காவலன் என உலகம் பழிக்கும்; அதனைப் பொறுக்க ஒன்றாலியலாது. ஆதலால் கலைஞ! யான் பிறந்தமையால் எனது மரபு ஓங்காவிடினும் அது கீழ்மைநிலை பெறாதவாறாயினும் பேணுவது என் கடமையாகுமென்பதறிக,

**பொன் முடியார்:** - குதிரைமலை நாட்டுக் கொற்றவ! நின் கருத்து சாலச் சிறந்தது அஃது ஆண்மையாளரிடமே அமைவது. பொருந! போர் என்னும்போதே என்னெஞ்சு துடிக்கின்றது; அஃது ஆற்றலின்மையாலன்று. இருவர்பாலேற்பட்ட சிறுபிணக்கு, போரின் வழியே தொழிற்படுங்கால் அதனால் அழிக்கப்படும் ஆண்மையாளர்தம் நல்லுயிர்கள் எத்தனை: அரிதிற்றிரட்டிய அரும்பொருள்கள், அருங்கலைகள், எத்தனை

யெத்தனை? அறிவுநிரம்பியவிடத்தன்றோ பிறரது அழுக்காறும் பகையும் அல்லற்படுத்துகின்றன. ஆதலால், நம் ஆழ்ந்தகன்ற அறிவின் விளக்கத்தால் அல்லனகடிந்து, பழிபெறுவாழ்க்கையால் நல்லன ஓம்பி, இனிய நல்லாறுகளால் இஞ்ஞாலத்தவரது நல்வாழ்வைப்பெருக்க வேண்டுமேயன்றி உடல்வலித்திறத்தால் அன்று. என்பதே என் கருத்தாம்.

**அதியமான்:**—மதிநிறைபுலவ! தங்கள் கருத்து என்பால் மாறுபடுகின்றது. ஏனெனில், புலவர்தம் வாய்மொழிக்கேற்ப வேண்டுவன யாவுமியற்றியும் பயன் பெற்றிலனே! இன்சொல், பணிவு, ஒற்றுமை இவற்றை வெறுப்பவன்பால் நம் கடமை யென்னை? காஞ்சிக்காவலன் என்பாற்கொண்ட வெறுப்பைத் தூது முறையால் நீக்கி அவனை என் நண்பனுகக் கொண்டமை இந்நாடு உணருமே. இவன்பால் என் முயற்சி பயனின்மை பயந்தமையால் இன்று அவனைப் போர்முனையிற்காணும் நிலை ஏற்படுகிறது.

**பொன்முடியார்:**—அஞ்சா நெஞ்சுகொள் அஞ்சி மன்ன! நினது உரம்பெற்ற நெஞ்சாண்மையைக் கண்டு மகிழ்கின்றேன். அறப்போர் தொடுக்கும் நின் திறம் போற்றற்குரியது. நின்மாற்றலரைப் போரிற் புறமுதுகிட்டு, உலகுயிர் அனைத்தையுங் காக்கும் அன்னையை நிகர்ப்ப அருணலம்பெற்று மகிழ்க! வாழ்க நின் செங்கோல்! வீழ்க நின் பகைஞர்! ஓங்குக நந்தமிழகம்

காட்சி முடிவு.

---

## இயல்-௩ காட்சி-உ

உறுப்பினர்:—மாணவர்பலர்; மணிமுருகன்; மணிவேலன்; மணிநாகன்; ஆசிரியர்-இறையனார்.

இடம்:—கோவலூர்ப் புறநகரின் கல்விக்கூடம்

பொழுது:—காலைப்பொழுது

[ஆசிரியர்-இறையனார், தமிழ் நாட்டுத் தலையாயவர்களால் நாட்டுக்குற்ற இழிவைக் கூறல்.]

**மாணவர் யாவரும்:—**

இறை வணக்கம்.

பூமகன் நெடுமால் போற்றும்-புனிற்றிளம் பிறையார் சென்னி
நாமகள் செல்வி பணிகொள்-நன்னுதல் தையல் பாகன்
சேவலும் மயிலும் பெற்ற-திருக்கைவேல் முருகன் தந்தை
மேவர வையங் காக்கும்-மெய்வெண்ணீற் றழகன் காப்பு.

திருமகள் உறையும் பேரூர்-திகழுறு முகில்மேற் றூழும்
பெருவரைமுள்ளூர் தன்னைப்-பேரெழில் அரணாப்பெற்றுக்
கடிமலர் பெண்ணை சூழும்-கடிதிருக் கோவல் மேவும்
வடிவினன் கொடைவாழ் கையன்-வல்லெழு தோள்கள் வாழி.

(பாடியதும் இடத்தமர்தல்)

**மணிமுருகன்:-** (தனித்து) மணிவேலன், நேற்றைய பாடங்களைப் படித்திருப்பான். கல்வி முதல்வர், நம்மைப்பாடங் கேட்கும் பொழுதும் கிட்டுகிறது.

**மணிவேலன்:—** என்னாலியன்றவரை நெட்டுருப் போட்டுள்ளேன்; ஆனால் சிலவிடங்களில் தட்டுகின்றது.

**மணிநாகன்** :—அடாடா, பாடம்பாட மென்று, சுவடியைக் கட்டிக்கொண்டு ஏனழுகிறீர்கள்? எங்கே நம் முதல்வரைக் காணோம்; இன்று வரமாட்டாரோ?

**மணிமுருகன்** :—அப்படியொன்றுமில்லை. முதல்வர், இங்கு விடியுமுன் வந்தார், பழைய மன்னரிடமிருந்து சிறிது முன் எவரோ ஒருவர் வந்தார்; அவரோடு வெளியே சென்றார்.

**மணிநாகன்** :—ஓஒ! பழைய மன்னர் ஆள் : ஏன் வந்தான்?

**மணிவேலன்** :—அஃதெமக்குத் தெரியாது.

**மணிநாகன்** :—இஃதறியா மக்களா நீவிர்? நல்ல பிள்ளைகள்! நம் பழைய மன்னர்-மலையமான் திருமுடிக்காரி, மிகவும் நல்லவர்; பேரறிஞர்; பிறவிக் குணமாகக் கொடையைப் பெற்றவர். வினை, எவரை விலக்கிற்று? 'குடைநிழலிருந்து குஞ்சர மூர்ந்தோர் நடைமெலிந்தோரூர் நண்ணினும் நண்ணுவர்' என்ற வுரைக்கு இலக்காயினர். அவரை யெண்ணும் போது நெஞ்சு துடிக்கிறது; ஈடு செய்யமுடியாத ஓரழிவு நமக்கு வந்தாற் போலுள்ளது.

**மணிவேலன்** :—அவ்வாறு, கருதலாமோ? காரி ஊழ்வினையால் கலங்குகின்றார். உலகிற் பிறந்தார்க்கு இன்பமும் துன்பமும் இயல்புதானே. இப்போது நம்மையாளும் அதியமான் அஞ்சி, மற்ற வேந்தரைப் போலவா வுள்ளார்? சிலவற்றுள், காரியைவிடச் சிறந்தவர் என்றன்றோ கூறுகின்றனர்.

**மணிநாகன்** ,—எவர் கூறுகின்றனர்? நானே சொல்லுகிறேன்' சொல்லு. இவ்வாறு, உன்னைத் தவிர இம்மொழியை வேறவருங் கூறவில்லை.

**மணிவேலன்** :—நன்று, நன்று! உன்னைப்போன்ற கிணற்றுத் தவளைகட்கு நாட்டுவளப்பம் எவ்வாறு தெரியும்? அதியர் கோமானின் ஆட்சி மேம்பாடுணராத உன்னை என்னென்பது?

**மணிநாகன்** :—ஏடா, என்ன வாய்த் துடுக்கு? நீ முற்று முணர்ந்த முனிவர் பெருமானோ? யாரடா அறியாதவன்?

**மணிமுருகன்** :—போதும் போதும்; நிறுத்துங்கள், ஆசிரியர் வருகின்றார்.

[ஆசிரியர் நுழைய, மாணவர்கள் தொழுதுநின்று பாடுதல்.]

பொன்னார்மேனி பொலிவெண்ணீறு
மின்னார்புனல்முடி மிளிர்நறுங்கொன்றை
கண்ணார் திருநுதல் கவின்பிறைத்திங்கள்
விண்ணோர்தொழுமடி விளக்குமூவுலகம்
நஞ்சமர்மிடறு நவின்றவர்க்கருளும்
செஞ்சுடர்முக்கண் செடிதுயரகற்றும்
கொல்லேறுடையான் குழன்மொழிகூறன்
தொல்சீர்பரவும் தூய்மைக்குரிய
செந்தமிழ்ப்பயிலும் செல்வநன்னெறியேம்;
எந்தையும்யாயும் இறையும்பிறவுமாய்
வந்தெமக்காகி வாழ்தருமருந்தே!
பைந்துணர்மலரால் பணிந்துமைத்தொழுதேம்
போற்றியெம்பெரும புகழுமைமின்சீர்
போற்றிபோற்றி திருவடிபோற்றி!

**இறையனார்** :—(இடத்தமர்தல்) அமருங்கள் (யாவருமிருத்தல்) மணி முருகா! நம் கல்வி - முதல்வன் - முதுகூத்தன், ஏனிங்குக் காணேன்?

**மணிமுருகன்** :—பெரும, வணக்கம். சிறிது முன்னதாக படைஞர் ஒருவர் இங்கு வந்தார்; அவர் பழைய

மன்னர் மலையமானின் மெய்க்காவலர் போற் காணப் பெற்றார். இங்கு வந்தவர், நம் முதல்வர்பால் எதோ மறைவாகக் கூறினார்; முதல்வர் உடனே என்னை யழைத்து, "நீ நம்மாசிரியர் வந்ததும், ஐயராணை நோக்கி யான் ஓர் அலுவற் பொருட்டுப் பணிவுடன் சென்றுளேன்' எனமொழிக" என்று சொல்லி வெளி யே சென்றனர்.

**இறையனார்** :- ஓ! அவ்வாறோ! மணிமுருக, அமர்க [மற்றவனை நோக்கி] ஏடா, மணிநாகா! யான் ஈண்டு வந்துறும் போது, இங்கு, எழுந்த பெரும் பேச்சு உங்களிடம் எவ்வாறு தோன்றிற்று? முதல்வனின்றேல் முதனூற் பயிற்சியைக் கருதாது வீணே இவ்வாறு பொழுதைக் கழித்தல் நன் றல்லவே.

**மணிநாகன்** :—அடிகாள்! எம்மைப் பொறுத் தருள்க. என்றுமில்லாது நம் முதல்வர், இன்று வெளிச்சென்றமைக் கேற்ப, 'யாண்டுள்ளார் நம் கல்வி முதல்தர்' என யான் கேட்டமையே இக்குழப் பத்தை விளைவித்தது.

**இறையனார்** :—இஃதென்னை! நீ கேட்டதற்காக வோ இவ்வாறு பெரும்பேச்சு?

**மணிநாகன்**:—எம் குரவ! என் சிறுமொழி கேட்ட ருள்க. முதல்வர் எங்கேயென யான் வினவியபோது, 'மலையமானின் ஊழியருடன் சென்றார்' என மணி முருகன் கூறினன். மலையமான் என்றசொல் என் செவியிற் பட்டதும் யான் அவரைப் புகழ்ந்தேன். என்னை மறித்து அவரினும் அதியமான் சிறந்தவரென மணிவேலன் மொழிந்தான். அம்மொழியால் விளைந்த சொற்பெருக்கே இவ்வாறு தோன்றியது.

**இறையனார்:**—சிறுவரீர்! நுஞ்செயல் என்னைக் கவலுறச் செய்கின்றது. எக்குடிப்பிறந்த யாவரேயா யினும் உரியபண்பு, அறிவு, பயிற்சி இவைபெறாது ஒரு வினையைத் தொட்டால், அஃது ஒருபோதும் ஈடேறாது; மற்றும், பயனில் வழக்கும் பிணக்கும் தோற்றி, நாட்டினது சீரையுஞ் செல்வத்தையுங் கெடுக்கும். இதனால், நும்நிலை யுணர்க.

மண்ணியல் நாடும் மக்காள்! நீவிர் உலகியல் அறி யாதவர்; ஆள்வினையு நுட்பமுங் கொண்டாரியற்றிய நன்னூல்களைக் கசடறக் கற்கத்தகும் நெறியினீர், தக் காரையடுத்தும் தலையாயவர்தம் பொன்மொழியைப் பேணியும் மாசிலாமதியால் ஆய்ந்து கண்ட உண்மை கள் பொதிந்த, ஆழ்ந்தகன்ற அறிவினோரமைத்த அறநூல்களைத் தெளிவுறக் கற்குங் கடமையும் பெற் றுளீர். ஆதலால், நீவிர் நல்லறிவுந் தூயவாழ்வும்பெறு கின்ற அந்நாளிற்றான், நல்லவர்-அல்லாதவரெனவும் மேலோர்-கீழோரெனவுங் கூறவுரிமை பெறுவீர். அன் றியும் நும்மொழிக்கும் கருத்துக்கும் செயலுக்கும், செல்வாக்கும் உயர்வும் தகுதியும் தோன்றும். அவ் வாறின்றி, பளிங்குபோன்ற களங்கமற்ற, தூய, சார்ந் ததன் வண்ணமாகும் உளம்பெற்றநீவிர், குன்றா வூக் கத்துடன் இம்மை மறுமைக்காகும் உறுதிப்பொருள் களை நன்கு நாடிக் கல்லாதுபோனால், மாணவர் என்ற பெயர் உங்கள்பால் நில்லாது.

மாணவர்களே! உயர் மரபு, வள்ளன்மை, தோள் வலிமை, புலவர்பாடும்புகழ், மூவேந்தரஞ்சும் படை வலி, செங்கோன்மை ஆய பலவும் அதியமானும் மலையமானும் ஒரேபடித்தாகப் பெற்றுள்ளனர். எனினும், ஊழ்வலி எவரைவிட்டது? தன்னலமே

பேணி வஞ்சித்தொழுகு மதியிலார்தம் நயவு ரையை, வாய்மையெனக்கொண்டு மயங்கி, மறை நூலாற் கட்டுண்ட வேழம்போற் சிக்குண்டு, இவ்விரு மன்னரும் தம்முட் பகைத்து நிற்கின்றனர். தமிழ்த் தாய் தளர்ச்சிபெற, தமிழ் மக்கள் வாட்டமுற, தமிழ்க் கலையும் தண்தமிழ் நெறியும் தம்மியல் கெட்டுத் தலை தடுமாற, ஐயகோ! அவர்கள் படரும் தீய செலவினைக்கண்டு என்னுளம் அனலிற்பட்ட மெழுகுபோலாகின்றது. எல்லாம்வல்ல இறைவன் நமது மொழியும், நாடும், நந்தம் இயற்கை வாழ்வும், பண்டுபோற் சிறந்தோங்க, இனி, என்று அருளு வனோ? எல்லாம் அவன்றன் திருச்செயல்போலும்!

என்னரிய பிள்ளைகளே! இனி நீவிர், நும்மறி வுக்கு அப்பாற்பட்ட ஒன்றைப்பற்றி உரையாடு தலொழிந்து; இவ்விளமைப்பருவத்தே கற்கவேண்டு வன யாவையுங் கசடறக்கற்று நற்றிறம் பெறுவீர் களாக! மக்காள்! காலையுணவுப் பொழுதுங் கடுகிற்று; நீவி ரனைவீரும் இல்லஞ் சென்று வருக.

[மாணவர் அனைவரும் எழுந்து வணங்கி மொழிதல்]

**வைகறைத் துயிலினீங்கி வகையுடன் கடனையாற்றி**
**மைவளர் நெடுங்கண்வாணி மலரடி தொழுதுபோற்றி**
**ஐயர்தம் முறையிற்காணும் ஐம்புல நுகர்வின்மேலாம்**
**உய்நெறி யுணர்ந்தேம்காலை யுணுக்கொண்டு வாரேமையா.**

**(யாவரும் செல்லுதல்)**

**காட்சி முடிவு.**

---

## இயல் ந—காட்சி ந

**உறுப்பினர்:—ஆசிரியர்-இறையனார்; கல்விமுதல்வன் முதுகூத்தன்; மலையனின் இருமக்கள்**

இடம்:—திருக்கோவல் புறத்துற்ற ஒரு கல்விக்கூடம்

பொழுது:—முற்பகல்

[மலையனின் இருமக்களோடுற்ற முதுகூத்தன், காரியினால் ஓரிவள்ளலிறந்ததையும் அதியமான் அழிவுறப்போவதையும் ஆசிரியர்-இறையனார்பா லறிவித்தல்.]

**இறையனார்**:—ஓம் முழுமுதற்பொருளே, முருகா, உயர் தனிச் செம்பொன்னின் ஒளியே! போற்றி, போற்றி!

(கண்மூடி உளம்பற்றல்)

அறிவார் அழகார் அருளார் அடலார்
திருவார் மயிலார் திறனார் செயலார்
மருவார் குழலார் உளமார் உடையார்
முருகார் முடியார் மகனார் அருள்வார்.

• [கண்திறந்தபோது முன் நிற்பானைக் கூர்ந்து நோக்கி] ஏடா, முதுகூத்த, நீ யாண்டுச் சென்றனை? மலர்முகம் பெற்ற இளநகையுற்ற இம்மழலைச் சிறார்கள் யாவர்?

**முதுகூத்தன்** :—ஒருமையினின்று, இருவினை தவிர்ந்து, மூவழுக்ககற்றி, நாற்பொருளுணர்ந்து, ஐம்புலனடக்கி, அறுவழுக்காற்றால், எழுமையும் பிறங்க, எண்திசை போற்ற, ஒன்பான் சுவை பொருந்த, பதின்குற்றமின்றி எம்மைப் பயிற்றுவிக்கும் பண்ணவ! தங்கள் அடிமலர் அடியேனின் திருமுடிக்கு அணியாகுக; வணக்கம். அண்ணலே! இன்று காலையில், வீரர் செங்கைவேலன் என்ற என் உறவினர், மலையமாமன்னரின் மெய்காவலர். என்பால் சில

செய்தியைத் தனித்து அழைத்துச் சென்று கூறினர். அஃதாவது, வீரமிக்க அதியமான்பால் தோல்வி பெற்று, தனது திருக்கோவலூரையிழந்து, தன் மனைவி மக்களைத் தக்கார் காப்பிலிருத்தி, அவர்களை அரிதிற்பிரிந்து சேரநாடு சென்ற நம் காரியினது பின் வரலாறாகும்.

பெரும! சேரமான் பெருஞ்சேரலிரும்பொறை, நம்மலையனை மிக்க அன்புடன் வரவேற்று அளவளாவி மகிழ்ந்தனராம். பிறகு, கோவலூரைக் கைப்பற்றப் படையுதவி செய்வதாகவும் வாக்குறுதி தந்தனராம். அதற்காக நந்திருமுடிக்காரி சேரமானின் வேண்டுகோட்கிணங்கி, ஒரு பெரும்படையுடன் சென்று, கொல்லி மலைத்தலைவன்-ஓரியைக்கொன்று, அந்நாட்டைச் சேரமானிடஞ் சேர்த்தனராம். அப்படையெடுப்பால் வெற்றிபெற்ற காரி, தம் படைஞரோடு ஓரியினது நகர்க்குட் சென்றபோது, அவ்வூரார் அனைவரும் ஓரியின் பிரிவால் அழுதரற்றிய காட்சி ஆண்டுச் சென்றாரனைவரையும் மிகவும் வருத்தியதாம்.

**இறையனார் :—(நெட்டுயிர்ப்புற்று)** ஆ இறைவ! ஓரியின் வாழ்வு இவ்வாறு முடிவது முறையாமோ? காரி, ஓரியைக்கொன்றார்; நன்று, நன்று! இஞ்ஞாலம் இனி நில்லாது; உண்மை. ஆம் உண்மையே...... பொன்னுலகவேந்தும் பொறாமை பெறுமாறு இவ்வாழ்வின் நல்லறங்கள் பலவும் ஓம்பி, இத்தமிழகத்தில் உயிர்ப்பணி பூண்ட வள்ளன்மைமிக்க செல்வங்களாய எம் அதியமானும் ஆதன் ஓரியும் மலையன் காரியும் ஒன்றுபட்டு இன்பநிலை யடையாதவாறு, தன்னலமே தாங்கும் வன்னெஞ்சர்களால் தடுக்கப்

பெற்று, ஐயகோ! நல்லறங்கள் நலியவும் தமிழ் மக்கள் தளரவும் ஆகின்றனவே. ஆ! கொல்லிநாடாண்ட கோவே! வலிய விற்பயிற்சி பெற்ற ஓரி! இன்றுடன் நின் கொல்லிவரை கல்விச் செல்வரைக் கைவிட்டது. மாரியை நிகர்க்கும் நின் கைவண்மையை இனிப் புலவர்கள் யாண்டுக் காண்பர்? அந்தோ! இரப்பவர் நெஞ்சுள் இன்புறூற்றுயமைந்த அக்கொல்லிவரை, இன்று கொடுப்பாரற்ற கொல்வரையாய் நிற்கின்றதே!......முதுகூத்த! மற்றைய கூறுக.

**முதுகூத்தன்** :—அருண்மிகு அடிகாள்! ஓரியைக் காரியால் ஒழித்து, நீண்ட நாட்களாகத் தான் அவாவிய கொல்லி நல்வரையைக் கைக்கொண்ட சேரமான், இன்று தன் வாய்மையைக் காக்கும் பொருட்டுத் தனது பெரும்படையால் அதியமானை எதிர்த்துப் போரில் வெல்லவும் திருக்கோவலூரை மறுபடியும் நம் மலையமான் பெற்று மகிழவும் வேண்டுவன யாவும் அமைத்துள்ளாராம்.

**இறையனார்** :—நீயும் ஒரு நற்செய்தியே கூறினாய்! எனினும், அதியமானுக்கு அழிவு நேராதவாறு, நம் மலையன் தன் அரசுரிமையைப் பெற்றால் இத்தமிழகம் பெரும்பேறு பெற்றதே. எவரறிவார் அவர்தம் திருக்கூத்தை? நன்று, முதல்வ, இம்மக்களைக் குறித்து இதுகாறும் நீ, யாதும் கழறினாயில்லையே?

**முதுகூத்தன்** :—பொறுத்தருள்க; எம் மாசகற்று மதியோய்! இவ்விருவரும் நம் காரியின் அரும்பெறன் மக்களாவர்.

**இறையனார்** :—ஆ, அப்படியா? என்னினிய மக்காள்! ஈண்டு வருக; வருக நலமுடன்; வாழ்க வலம்

பட! (தழுவிக்கொள்ளுதல்) முதுக்கூத! நின்பாலிவர் கள் எவ்வாறடைந்தனர்?

**முதுகூத்தன்** :—ஆசிலா ஐயனே! நங்காரியின் பகைஞர் இவர்களைக் கவர்ந்துசென்று, மலையன்பால் மனக்கசப்புற்ற புகார்ச் சோழன் கிள்ளிவளவனிடஞ் சேர்த்தனராம். அங்கு நிகழ்ந்தனவற்றை இம்மழலை மொழியார் இனிதே நவில்கின்றனர்.

**இறையனார்** :- மணிமொழி பேசும் மக்காள்! அங்கு என்ன நிகழ்ந்தன? என்பாற் கூறுக.

**முதன்மகன்** :—ஐயனே! ஒருநாள் மாலையில் எங்கள் வீட்டருகே இருந்த சோலையில் என் தம்பி யுடன் நான் விளையாடிக் கொண்டிருந்தேன். என் தம்பி அங்கு ஓடிய ஒருமானைக்கண்டு அதனிடம் ஓடினான்; நானும் சென்றேன் மான் எங்கேயோ மறைந்தது. ஆனல் ஒரு கறுத்த உயர்ந்த ஆள் தென் பட்டான். அவன் எங்களிடம் விரைந்துவந்து ஒரே பிடிக்குள் எங்களைத் தூக்கிக்கொண்டு ஓடினான். நாங்கள் அலறினோம். எவரும் அப்பக்கம் வரவில்லை. அவன் எங்களை ஓயவைத்துப் பணியாரமும் பழமும் கொடுத்தான்; எங்க ளப்பாவிடம் அழைத்துப் போவதாகக் கூறினான். பிறகு நாங்கள் உறங்கினோம்,

விடிந்து எழுந்தபோது நாங்கள் ஒரு மன்னர் முன் இருந்தோம். அவர்கள் என்னையும் தம்பியை யும் ஒரு புல் நிறைந்த வெளியில் நிறுத்தினார்கள். என் தம்பி என்னைக்கட்டிக்கொண்டு ஐயோ, அப்பா, அம்மா! எனத்தேம்பியழுதான். எங்களைச் சுற்றிலும். பலர் நின்றுகொண்டிருந்தனர். எங்களை நோக்கி ஒரு யானை துதிக்கையை உயர்த்திப் பிளிறிக் கொண்டு வந்தது. என் தம்பியிடம், 'தம்பி! அழாதே

அதோபார், யானை வருகிறது. அப்பா வருவார்' என்று நான் கூறிக்கொண்டிருந்தபோது, ஒரு நரைத்த கிழவர் எங்கிருந்தோ மன்னனிடம் ஓடி வந்தார்; எங்களைச் சுட்டி ஏதோ கூறினார். உடனே ஒருவன் எங்களை அழைத்துச்சென்று உணவு முதலி யன தந்தான். பிறகு எங்கள் தந்தையிடம் வந்தோம். அங்குநின்றும் புறப்பட்டு இப்போது எம் அன்னை யிடஞ் செல்கிறோம்.

**இறையனார்** :—என் கண்மணிகாள்! திக்கிலா திருந்த உங்கட்குத் தெய்வமன்றோ துணை நின்றது. யாவும் அவன் செயல் போலும்.

**முருகூத்தன்** :—பெரும! இச்சிறுவர்களைப் புகார்ச் சோழன் இரக்கமின்றி இடர்படுத்த நினைந்தமையைச் செங்கைவேலர் கூறுங்கால் என்னுடல் விதிர் விதிர்த் தது; எவர் செய்த நல்வினைப் பேறோ இவர்கட்கு உயிர்ப்பிச்சை யளித்தது ஐயனே! அக்கிள்ளிவளவன், இவ்விளைஞ ரிருவரையும் யானைக்காலில் இடுமாறு பணித்திட, அதற்காவன யாவும் முடிவு பெற்றதாம். அந் நிலையில் நந்தமிழகத் தனிப்பெரும் புலவரும், உண்மையைப் புரக்க உலையா முயற்சி கொள்பவரும் அருண்மொழிப் பாவலருமாய கோவூர்கிழார், எவ் வாறோ வளவனின் கொடுஞ்செயலினையுணர்ந்து காற் றினுங் கடிதாக வளவனை யணுகி, "வெல்போர் வேந்தே! எட்டுத்திசையினும் எரிகொள்ளி உதிர்தல், மரம் இலையற்றுவாடல், ஞாயிறு பல்லிடத்துந் தோன் றல், ஆடை களைதல், அச்சந்தரு பறவை அலறுதல், எயிறு நிலத்துவீழல், எண்ணெயாடல், பன்றியேறே றல், படைக்கலக் கட்டில்கவிழ்தல் ஆகியவற்றைக் கனவினும் மெய்மையினுங் கண்டுங் கலங்காது பகைக்

களஞ்சென்று வாகைசூடும் வலிமையுடையோய்; நீ தான், ஒரு சிறு புறவின் துன்பமன்றிப் பிற உயிர்கட்கும் உற்ற துன்பத்தையும் துடைத்த சோழன் சிபியினது மரபிலுள்ளாய். இச் சிறுவரோ, அறிவார் இம்முதுண்ணுங் கற்றூரது வறுமைக்கு வருந்தி அதனைப்போக்க, தமது செல்வங்களைப் பகுத்துக் கொடுத்துண்ணும் தண்ணருள் பூண்டாரது வழியில் வந்தவர். இவர்கள் இப்போது யானையைக் கண்டு, தாம் இயல்பாக அஞ்சியழுதலையுமறந்து நிற்கும் பச்சிளங் குழவிகளாயுளர். அன்றியும் நின் மன்றத்தினை அச்சத்துடன் நோக்கி, முன்பறியாத ஒரு புதிய வருத்தத்தைப் பெற்றுள்ளனர். நான் கூறியன வற்றை நீ உள்ளவாறு கேட்டாயாயின், இனி நீ விரும்பியதைச் செய்வாயாக" எனக், கல்லு மரனுங் கரைந்துருகக் கூறவே, கிள்ளிவளவன் கோவூர் கிழாரது அருளுரையைச் செவிமடுத்து, தன் செயலுக்கு நாணி இவர்களை உடனே விடுக்கப் பணித்தனனும்.

**இறையனார்**:—என்னருமருந்தன்ன மக்காள்! எத்தீங்கு மினி நும்பாலெய்தாது. முருகனது பேரருளை என்றும் நீவிர் பெற்றவராவீர். ஞாயிற்றின்முன் வீழும் பனித்துளிபோல் நும்துயர்கள் யாவும் மாய்ந்தன.

வாழ்க எம் சிறுவீர்! வாழ்க, வாழ்க!! முதுகூத்த! இவர்களை அன்புடனே அழைத்துச் சென்று உரியவர்பால் விடுத்து மீள்க. கடிதிற் சென்று வருக.

**முதுகூத்தன்**:—அண்ணலே! விடை பெறுகின்றேன். விரைவிற்சென்று மீள்வன். (வணங்கி, நீங்குதல்.)

காட்சி முடிவு.

## இயல்—4.

**உறுப்பினர் :**—மலையமான் - திருமுடிக்காரி; ஒற்றன்-மறை மாடன்; சேரர்படைத்தலைவன்-பிட்டங்கொற்றன்; பெருமக்கட் குழுவினர்; கடியநெடுவில்லி.

**இடம் :**—திருக்கோவல் நகர்ப்புறத்துற்ற ஒரு மன்றம்.

**பொழுது :**—பிற்பகல்.

*மலையன், சேரனது வலியால் அதியனை வென்று அரசு பெறுதல்.*

**மலையமான் :**—(உட்புகும் ஒற்றனிடம்) வருக மறைமாட; என்ன ஆயிற்று? நமது வெற்றிநிலை எவ்வாறுளது?

**மறைமாடன் :**—பெருமை மிக்க மன்ன! கவலற்க. நலமே விளைந்தது; வெற்றியும் நம்மதே. நம் சேரர் படைக்கு ஆற்றாது, மதிற்புறவாயிலை அடைத்து, அன்று தகடூர்க்குள் தயங்கியிருந்ததே போன்று, இன்றும் அதியன் நம் இரும்பொறையினது இகலுக்கஞ்சி நின்றனன். மேலும் அவனது கரிகளும் பரிகளுங் காலோய்ந்தன; படைஞரோ சேரர்முன் வீரமற்று வீழ்ந்தனர். வீரருள் வீரனைய அவ்வஞ்சி இன்று புலி முன் நின்ற புல்வாய் போற் கலங்கினன். யானும் இஃதோர் உண்மைக் காட்சியாமோவென மருண்டேன். வள்ளலே! நம்சேரமானது கூரிய அம்புக்கிலக்காகி, மண்மகட்குத் தன்னுடம்பீந்து, பொன்னிலக்கன்னியர் போற்ற, விண்ணகவாழ்வை விரும்பி, இன்றே ஏகினன் அந்நெடுமானஞ்சி.

**மலையமான் :**—ஆ! (வியப்பு மேலிட) அதியனும் மாண்டனன்! ஆம், ஆம்: தீவினை! இம்மண்ணகக் கூத்தில் அவன் இனி மனமற்றான் போலும்?

என்னே, இம்மாநிலவாழ்வு! பாண்டவரைவரும் கவு ரவர் நூற்றுவரும் அன்று நிகழ்த்திய மாபெரும் போர் நமக்குத்தந்தது என்? இந்நிலமக்கள் தன்மக் களை யிழக்கவும் அம்மக்கள், தம்முறவினர் பிரிவால் வருந்தவும் தொன்னிலையுற்ற திங்கண்மரபு கொடி வழியற்றுக் குலையவுமே யன்றிப் பிறிதொன்றுங் காண்கிலேம். இன்றும் என்பொருட்டா யெழுந்த போரும் அளவு, திறன், முறை இவற்றால் மாறுமே யாயினும் முடிவினில் அப்பெரும் பாரதப் போரையே தழுவுகின்றது. அந்தோ! நெருநற்போரில், எனது நலத்தையே உன்னி, என்போன்ற ஒரு நாட்டுத்தலை வனும், கொடை மடங் கைக்கொண்டவனும், குடி மக்களனைவரும் தம்முயிரெனப் போற்றி வாழ்த்து முறையாற் பயிலும் கொற்றவனும், கொல்லிமலைக் காவலனும் ஆய, வள்ளல் வல்வில்-ஆதன் ஓரியை, எனது புல்லிய கைகளாற் கொன்று ஒரு வள்ளன்மை மிக்கானின் வாழ்வினை ஒழித்தேன், ஐயகோ! இன்று, தன்னலன்வெறுத்து, தன்னுயிரிடத்தும் அன்பின்றி, தான் அரிதிற் பெற்ற, உண்டவரை நெடுநாள் வாழ் விக்கும் ஓர் உயரிய இனிய நெல்லியங்கனியை ஔவைக்கு நல்கி, அழியாப்புகழ்பெற்ற அவ்வதிய மான் நெடுமான் அஞ்சி, என் பொருட்டு, என் நண் பன் இரும்பொறையினது கூரிய அம்பு, தனது வலிய நெடு மார்பைப்பற்றி அருவியெனக்குருதி கொப் பளித்து அணிசெய, தனது மண்ணக ஆட்சியை வெறுத்து விண்ணக வீர ஆட்சி எய்தினமையால், இத்தமிழகம் ஒப்பற்ற மற்றொருமணியை இழந்தது. முடியுடைய மூவரும் முற்றினும் முடியாவன்மை பெற்றிருந்த வல்வில் ஓரியும் அதியனஞ்சியும் தங்நலம்

பேறுத் தன்மையாரன்றே? வறியார்க் கீவதும் எளியாரின் இன்முகங் காண்பதும் தம் பெரு நோன்பாக் கொண்டு வாழ்ந்த அவ்விருவரையுங் கொன்று, யான் மட்டும் எழினலம்பெற அரசு கட்டிலிலமர்ந்து ஆட்சி முறை செலுத்தல் அழகாமோ? ஆ! அன்பின் வடிவாய ஆண்டவ! எனது குற்றம் பொறுத்து எளியனைப் புரத்தல் நின்பரம். எனது உளக்கலக்கம் நீக்கி, என்பால் அமைதி நிலவ அருளுக.

**மறைமாடன்** :—பீடுடையபெரும! உலகியலறிந்த தாங்கள், அதனை மறந்து உளம் பொருந்தாவுரை பல நவிலுதல் ஏற்புடைத்தன்று. 'அரசியல் பிழைத்தார்க்கு அறங் கூற்றுவது' அறநெறியன்றே! தன் னிலையினின்றுந்தவறினுல் எவனும் இடர்ப்படாதிரான்; அவன் உயிரொழியத் துயருழந்தழிவன் என்பது பொய்க்காது. அண்ணலே! அதியன் அன்று தகடூரைப்பற்றித் தனியாட்சி பெற்றதை எவரேனும் தடுத்தனரோ? நம்மலையமானுடு அவற்கு அப்போது என்ன தீங்கு இழைத்தது? இவை நாடாது, தமிழகத்தே தாய்மை பெற்றோங்கிய தங்களை நாட்டினின்று மோட்டியது நலமாமோ? மற்றும், தாங்கள் ஒருபுறமும், தங்கள் காதன்மிகு கற்பின் கொழுந்தாய எம் அன்னையார் மற்றொருபுறமும் எம் நாட்டின் இளஞாயிறும், மதிதவழ் மலர்முகம்பெற்ற முருகனுமாய எம் இளவரசராகும் தங்களது மக்களிருவரும் வேறொருபுறமும் உயிருக்கே அஞ்சி, களைகணற்று, கவலைமேற்கொண்டு கலுழ்ந்து நிற்கச்செய்த கொடும் பழிகள் யாவும் வீணுகுமோ? திக்கற்றோர்க்குத் தெய்வமன்றோ துணை நிற்கிறது.

**காவலன்** :—(வணக்கத்துடன்) எம் இறைவ! நம் படைத்தலைவர் கடியநெடுவில்லியும் சேரமான் படைத்தலைவர் பிட்டங் கொற்றனும், பல குடிமக்களும் படை வீரருஞ்சூழ, வெற்றிக் கொடிபறக்க விரைந்திவண் வருகின்றனர்.

**மலையமான்** :—அவர்கள் வரவு எவர்க்கும் நலனைத்தருக. (அனைவரும் புகுதல்) வருக எம் பிட்டங்கொற்ற, வருக, வருக! படைவீரர்காள், குடிமக்களே! உங்களனைவருக்கும் என் அன்புகலந்த நல்வரவேற்பு அமைக. (யாவரும் வணங்குதல்)

**பிட்டங் கொற்றன்** :—வெற்றி மிகு வாகையணி வள்ளால்! மலையமாநாட்டுக் கோவே! நினது செங்கோன்மையால் நினது புகழோங்குக. வணக்கம். மலைய! எம்மன்னர் மன்னன் சேரமான் இரும்பொறை, தொன்மை பெற்றுயர்ந்த முடி-மூவேந்தர் தம் முறை தவிராநெறிக்கு எவ்வகையானும் மிழுக்கு நேராதவாறு காக்கவும், பண்டுநடந்த பாரதப்போரில் மற்றைய மன்னரொப்பப் படைத்துணை போயதோடமையாது பசிப்பிணியாற் கலங்கிய அனைவர்க்கும் பகைவர் துணைவர் என்ற பாகுபாடின்றிச் சோறிட்டு நீர் கொடுத் துதவிய, 'பெருஞ்சோற்றுதியன்' கொடிவழிக்கு நொடிநிலைவாராது தடுக்கவும், நாடு தவிர்ந்தேகிய அன்று நின்பாற் கூறிய மொழிக்கு ஊறுபாடுறாதவாறு நிற்கவும், மற்றும் கொல்லிமலை நாட்டைப் பெறுமாறு நீ அவருக்காற்றிய பேருதவியைப் போற்றவும் உளம்பற்றி, உற்றகடனுள் ஒரு சிறிதும் வழுவாது, இயன்றவரை புரிந்த அவர் தம் பெருவினைத்துணையை ஏற்றுமகிழ்வாயெனக் கருதுகின்றேம்.

**மலையமான் :—** சேரமானது சினப்படை நடாத்தும் பீடமை பிட்டங்கொற்ற! வாழ்க நீ பல்லாண்டு. பொருந! பால் வேண்டாப் பூனையும் பழம் விரும்பாக் கடுவனு முண்டோ? அரசு பறிகொடுத்து அலந்துநின்ற எனக்கு 'ஏற்றுக்கோடல்' என்ற முறையும் வேண்டுமோ? என் முன்னோராற்றிய நோன்பின் பயனால் என்பாலிரங்கி, பொருட்செலவு, உடல் முயற்சி, துயர்ப்பெருக்கம் ஆய பலவு மேற்கொண்டு யானிழந்த நாட்டை இன்று மீட்டுத் தந்தருளிய தங்கள் தலைவரும், என் பெருஞ் சேரருமாய இரும்பொறை மன்னர்க்கு யான் என்றுங் கடமைப் பட்டுள்ளேன். மற்றும், அவர் எனக்காக ஆற்றிய பெருஞ் செயல்கள் யாவையும் எனதுள்ளத்திருத்தி எழுமையும் போற்றுவேன். இஃது றுதியே.

**பிட்டங்கொற்றன்:—** மாண்புமிக்க மலைய! நினது அன்பினை அறிவேம். எம் வேந்தர் என்றும் நின் அன்பர்: நினது வாழ்வில் கருத்துடையர்: நினது வலியைப் புகழ்பவர்: பொய்மிடையா நினது பொன் மொழிகளைத் தனது உய்வகையாக்கொண்டு உளத்திற்பதிப்பவர். எம் சேரர்கோனது நாடும் நினது மலையமா நாடும் இனி ஒன்றுபட்டன. இவ்வொற்றுமை மிக வலியது. நம்மை வெல்ல எவராலும் இனி இயலாது.

காரி மன்ன! எம் சேரமான் எம்மை நின் பாலனுப்பியதை யறிக. யாம் வந்தமை, தகடூர்-அதியமானஞ்சியை விழுப்புண்படுத்தி வீழ்த்திய இன்றே, இம்மலைய நாட்டரசியலை நின் பாலமைத்தற்கேயாகும். நின் ஆட்சிக்குரிய மணிமுடியும் கொற்றவாளும்

ஈண்டுள. எம் சேரரது கருத்துக்கிணங்கி, இன்னே முடிசூட்டு மங்கலம் நிகழ உளம் கொள்க.

ஈண்டுக் குழூமியுள பெருமக்களே? இன்று முதல் நம்மலையமான் திருமுடிக்காரியினது வாழ்வு பல்லாற்றானுஞ் சிறப்புறவும் சேரமாநாட்டுக்கு மலையமாநாட்டுக்கு முள்ள தொடர்பு ஓங்கவும் தமிழன்னையினது தாள்தொழுது, நம்காரிக்கு இத்திருமாமணி முடியினைச்சூட்டி மகிழ்வோமாக.

[பிட்டங்கொற்றன் முடிசூட்ட, கடியநெடுவில்லி வாட்படை வழங்கல்.]

**மறைமாடன்** :—மலையமாநாட்டு மாண்புமிகு தலைவர், எம் திருமுடிக்காரிவேள், வாழ்க!

**பெருமக்கள்** :—வாழ்கவே!

**பிட்டங்கொற்றன்** :—திருமகள் அவாவுந் திருக்கோவலூரையும் கருமுகில் தவழும் முள்ளூர் மலையையும் பெற்ற மலாடுடைய மன்ன! நினதுகொற்றம் ஓங்குக! இன்றுதொட்டு இந்நாட்டவர் அனைவர்க்கு முரிய அன்னை, தந்தை, ஐயன், மன்னன், இறைவன் ஆய யாவுந் நீயே யன்றோ? எனவே, நின்மாற்றலருடன் மருவி வாழ்ந்த எவரேனும் இன்று காணப்படுவராயின், நீ அவரிடத்தும், அவர்தம் பழவினைமேற் கருத்தின்றி அன்பாயிருத்தலே அறனும். இணக்கமிலாதிருந்தவர்பால், ஒருவன் தனக்கு வலிமை மிகுந்த நாளில் பெருந்துயர் தருதல் இழிவுடையதாகும். அஃது அவனது அறியாமையால் வளர்க்கப்பெற்ற பண்பிலா வாழ்வையே உணர்த்தும். ஆதலால், இன்சொல், தீநெறி படராச்செயல்,

அறிவினைவு ஆய இவைபெற்றார் என்றுங் கீழ்மை யறியார் என்பது திண்ணம்.

வள்ளால்! பொய்யில் புலவனின் பொருளுரை தேறிய நின்பால், யாம் மற்றுங் கூறவேண்டுவதின்று. நீ, நெடிது வாழ்க; நினதுகோல்நிறை இஞ்ஞாலங் காக்க; நின்னைப்புகழ்ந்து பாடுவாரது வறுமை நீறு பட்டொழிக; நினது நாடு, நீர் நில வளப்பங்கள் சுரப்ப அமைக; நின் குடிகள், கல்வியுஞ் செல்வமும் பெற்றாராய், பசி, பிணி, பகையின்றி அருண்மேவிய பெருந்திருவினராய் வாழ்க; நீயும் நின் சுற்றமும் திருவருட்டுணையால் எல்லா நலனும் எய்தப்பெற்று பல்லாண்டு, பல்லாண்டு வாழ்வீராக.

| கடிய நெடுவில்லி | குடிமக்கள் |
|---|---|
| நம்மன்னர் மன்னன், சேரமான் இரும்பொறை ! | வாழ்க ! |
| சேரமான் படைத்தலைவர், பிட்டங்கொற்றனார் ! | வாழ்கவே ! |
| நம்மன்னர் பெருந்தகை, மாபெரு வள்ளல், | |
| மலையமாநாட்டுத் திருமுடிக்காரிவேள் ! | வாழ்க, வாழ்கவே !! |

வாழிபல வூழிதொறும் வாழிதமி ழன்னாய்
மைந்தரொடுந் தொண்டரொடும் வாழிதமி ழன்னாய்.

காட்சி முடிவு

முற்றும்

Publication No. 427

# SANGAKALA VALLALGAL

## SECOND BOOK

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA
WORKS PUBLISHING SOCIETY
TINNEVELLY LTD.,
TIRUNELVELI & MADRAS

Price Rs. 1-12-0